# இந்த இதழ் துணுக்குகளுக்குத் தூக்குமுகம் !

இலங்கை வானொலியை ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்த கி. முருகவேள், அதே பாணியை விவித் பாரதியும் பின்பற்றினால் என்ன என்று கேட்கிறார் 43 பக்கத்தில்.

காசியிலுள்ள பெரிய கோவில் களைப் பார்த்துவிட்டு லலிதா செல்லப்பா41 பக்கத்தில் வருத்தப் படுகிறார். நியாய மான வருத்தமாகத் தெரிகிறது.

கோட்டூர் என் ஸ்ரீதர் கோபமாக இருப்பது 64பக்கத்தில். பப்ளிக்காக அதைத் தெரியப் படுத்தியிருக்கிறார்,

ஆ. பானுமதி குறிப்பிடும் முட்டாள்கள் சங்கம் பற்றி 45 பக்கத்தில் தெரிந்து கொண்டு சிரிப்பதற்குள்.

திசை முத்து 24 பக்கத்தில் சிரிப்பது காதில் கேட்கிறது. ஸ்ரீரங்கம் கோயிலில் தி.க. ஆசாமிகள் சாமி கும்பிடுவதைப் பார்த்திருக்கிறார் !!

ஹை! வாசனை! ராஜாஜி-மாதுளம் பழம்-கமல தியாகராஜன் 44 பக்கம்.

ஹும்! நாற்றம்! 15 பக்கம் ஏதோ புகை வருகிறது. பி. நாராயணன் பற்ற வைத்திருக்கிறார். கை. இராம. மதி பத்து ரூபாய் போய் விட்டதே என்று 23 பக்கத் தில் அங்கலாய்த்துக் கொள்கிறார். உஷ்... மெதுவாக...

55 பக்கத்துக்கு வாருங்கள். சீதா பஞ்சுவுக்கு நூறு ரூபாய் கிடைத்திருக் கிறது!

# இந்த இதழ் இலவச இணைப்பு!

இந்த இதழின் நடுவிலுள்ள பின்களை நீக்கி எட்டுப் பக்கங் களைத் தனியே உருவி இரண்டாக மடித்தால் 16 பக்க இலவச இணைப்பு கிடைக்கும். மையத்தில் ஒரு குண்டூசி பொருத்தினால் சிறு புத்தக வடிவம் பெறும்:

**போட்டிகளில் வெல்லுங்கள்!**

முன்னுக்கு வரத்துடிக்கும் ஒவ் வொரு இளைஞனும் படித்துப் பயனடைந்து பாதுகாத்து வைக்க வேண்டிய தொகுப்பு.

# அடுத்த இதழ் இலவச இணைப்பு!

கல்யாண மந்திரங்கள், சம்பிர தாயங்கள் பற்றிய சுவையான விளக்கங்களும் சட்டபூர்வமான விளக்கங்களும்:

**கௌரி கல்யாணம். வைபோகமே!**

ஒவ்வொரு குடும்பத்திலும் அனை வரும் படித்துப் பயனடைந்து பாதுகாக்க வேண்டிய பொக்கி ஷம்.



"ராஜீவ் காந்திதான் நம் நாட்டுக்குப் பெருமை தருபவர். மோதிலால் நேரு நமக்கு அளித்த பரிசு ஜவஹர்லால் நேரு. ஜவஹர்லால் மூலம் நமக்குக் கிடைத்த பொக்கிஷம் இந்திரா காந்தி. உலகின் பெரும் பகுதி சமாதானம், அன்பு இவற்றுக்கு இந்திராவின் தலைமையைத்தான் எதிர்பார்க்கிறது."

இப்படிக் கொஞ்ச நாட்களுக்கு முன் பேசியவர் யார் தெரிகிறதா? இன்றைய ஜனாதிபதி, உள் துறையில் இருந்தபோது பேசியது.

# வாஸந்தி

எச்சுமி விழிகள் விரிய வானதியைப் பார்த்தாள்.

''அது என்ன பேரு 'வானதி?' வனிதான்னு கேள்விப்பட்டிருக்கேன். ஒரு நடிகை கூட இருக்காளாமே. ஆனா வானதின்னு கேட்டதில்லே.

வானதிக்குச் சிரிப்பு வந்தது. எச்சுமியையும் அவளுடைய சிறிய பெரிய ஆச்சரியங்களையும் பார்த்து. எண்ணெய் தடவிப் படியப் படிய வாரிய தலைப் பின்னலை இறுக்கமாக ஒரு வாழை நார் கட்டியிருந்தது. அவளுடைய அங்கங்கள் இப்படிப்பட்டவை என்று கணிக்க இயலாத வகையில் ஒரு தொளபுளா ரவிக்கை. இறுக்கமாகக் கட்டப்பட்ட எண்ணெய்ப் பிசுக்கேறிய சின்னாளப் பட்டுப் புடவை. பளீரென்ற முகத்தில் உலகத்து அஞ்ஞானங்களை யெல்லாம் ஏந்திய படி விசாலமான கண்கள்.

''கல்கி கல்கின்னு கதை எழுதறவர் ஒருத்தர் இருந்தார். அவர் கதைன்னா எங்கம்மாவுக்குப் பைத்தியம். அவர் எழுதின நாவல் ஒண்ணுல வானதின்னு ஒரு கதாபாத்திரம்!''

''அதான் பார்த்தேன்! இது நிஜப் பெயராத் தெரியல்லே! இந்தத் தெருவிலே இருக்கிறவா பேருதான் எனக்கு நிஜம் — எச்சுமி, கோமு, சரசு, சம்பா, அம்புஜம்....!''

வானதிக்குச் சிரிப்பு வந்தது மறுபடி. ''நானும் நிஜம்தான் எச்சுமி'' என்றபடி ப்ரஷ்ஷையும் பேஸ்டையும் எடுத்துக் கொண்டு ''பல் தேய்க்க எங்கே போகணும்?'' என்றாள்.

''வாங்கோ என் பின்னாலே!''

வீடு நீள நெடுக அநேகமாய் இருட்டாய் இருந்தது. நிலைப்படி ஒவ்வொன்றிலும் நினைவாய்க் குனிந்து கொண்டு போக வேண்டியிருந்தது. திடீரென்று வெய்யிலின் வெளிச்சமும் நடு முற்றமும் முற்றத்தின் மையத்தில் கிணறும் தென்பட்டன. முற்றத்தைச் சுற்றி ஓடிய தாழ்வாரத்தை ஒட்டியபடி இருந்த துளசி மாடத்துக்கருகில் ஒரு நார்மடிப் பாட்டி அமர்ந்து கண்களை மூடிய நிலையில் ருத்ராட்ச மாலையை உருட்டிக் கொண்டிருந்தாள்.

''யாருடீ எச்சுமி?''

''டில்லியிலேந்து வரான்னு சொன்னேனே பாட்டி!''

''யாரு கப்புணி பேத்தியா?''

''ஆமாம்!''

''ஏண்டீம்மா ராமு சௌக்கியமா?''

எங்கேயோ ஞாபகமாய் நின்றவளை எச்சுமி விலாவில் இடித்து, ''உங்களைத்தான் கேக்கறா!'' என்றதும் திடுக்கிட்டு வெங்கட்ராமன் என்கிற தன் தகப்பனாரைத்தான் பாட்டி ராமு என்கிறாள் என்று உணர்ந்து ''சௌக்கியம் பாட்டி'' என்றாள்.

பாட்டி அவள் பக்கமே திரும்பாமல் ''இங்கே வந்து என்னவோ எழுத வரேன்னு சொன்னாளே?'' என்றாள்.

வானதிக்குக் கூச்சமாக இருந்தது. மனத்துக்குள் இருந்த திட்டத்தைப் பகிரங்கமாக நடு முற்றத்தில் நின்று கொண்டு, எங்கோ எதிர்ப் புறத்தைப் பார்த்தபடி கேள்வி கேட்கும் பாட்டியிடம் எப்படியென்று சொல்வது?

''அதெல்லாம் அப்புறம் கேட்டுக்குங்கோ பாட்டி. இப்பத்தான் வந்து இறங்கியிருக்கா. பல் தேய்ச்சுக் காப்பி கூடக் குடிக்கல்லே.''

''சரிதான். ஐயோ பாவம்...முதல்லே காப்பியைக் குடு. அப்புறம் பேசிண்டாப் போறது!''

பாட்டியின் குரலிலிருந்த கனிவு அவளுள் ஒரு விசித்திர உணர்வை ஏற்படுத்திற்று. பார்வை அவள் மேல் பதியவே இல்லை.

''பாட்டிக்குக் கண் தெரியாது'' என்று எச்சுமி மெள்ளக் கிசுகிசுத்தாள்.

சட்டென்று ஒரு பரிதாபம் ஒரு மெல்லிய இழையாய் உள்ளே படர்ந்தது. எச்சுமி பரபரவென்று கிணற்றிலிருந்து ஒரு குடம் ஜலம் இழுத்துத் தந்தாள்.

''இந்த ஓரமாப் பல் தேயுங்கோ!''

மார்பிள் டைல்ஸும் வாஷ் பேஸினும் பழகிப்போயிருந்தவளுக்கு அந்த முற்றம் மிகப் புராதனமான நினைப்பை ஊட்டினாலும்




**அறுவை :**

''ஜெயின் காலேஜ் எப்பவுமே காலையிலே மட்டும்தான் நடக்கும்!''

''ஏன்?''

''அது ஏ. எம். ஜெயின் காலேஜ்.''

இடம் துப்புரவாக இருந்ததை உணர முடிந்தது.

''குளியலறை எங்கே எச்சுமி?''

''அப்படியெல்லாம் இங்கே கிடையாது. நாங்களெல்லாம் இங்கேயேதான் குளிப்போம்.''

''இங்கேயா?'' — அவள் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். நடு மையத்தில் இருக்கும் முற்றத்துக்குள் பிரவேசிக்க நான்கு புறமும் வாசல்கள் இருந்தன. எந்த வாசலை என்று மூடுவார்கள்?

''நீங்க கவலைப்பட வேண்டாம். நீங்க குளிக்கறச்சே நான் காவல் காத்துண்டிருப்பேன். பயப்படாதீங்கோ!''

அவள் சிரித்துக் கொண்டே முகம் கழுவிக் கொண்டு தாழ்வாரத்துக்கு வந்தாள். எச்சுமி கூடவே நின்றாள் சோப்பு வேணுமா துண்டு வேணுமா என்றபடி.

''எச்சுமி, அந்தப் பொண்ணுக்குக் காத்தாலே டிபன் சாப்பிட்டு வழக்கமோ என்னவோ? இட்டிலி வார்த்து வேணா குடுக்கச் சொல்லு அம்மாவை!''

''சரி பாட்டி!''

''எனக்கொண்ணும் ஸ்பெஷலா எதையும் செய்ய வேண்டாம் எச்சுமி. இந்த வீட்டு வழக்கம் எப்படியோ அப்படியே எனக்கு இருக்கட்டும்.''

''நாங்களெல்லாம் பத்து மணிக்குச் சாப்பிடுவோம்.''

''எனக்கும் அது சௌகரியம்தான்.''

சமையலறை இருள் படர்ந்திருந்தது. அதில் நிழலுருவமாக எச்சுமியின் அம்மா ருக்மிணி நின்றிருந்தாள்.

''இந்தாம்மா காப்பி குடி.''

அந்தக் குரலிலிருந்த கனிவு அவளுள் மறுபடி ஒரு மெல்லிய ஆச்சரியத்தை ஏற்படுத்திற்று. இது இவர்களுடைய ட்ரேட் மார்க்காகவோ, ஸ்பெஷல் குவாலிட்டியாகவோ இருக்க வேண்டும் என்று தோன்றிற்று.

காப்பி அவளுக்குப் பழக்கப் பட்டதாக இருக்கவில்லை. 'கருப்பட்டிக் காப்பி உங்களுக்குப் பிடிக்குமோ என்னமோ' என்ற எச்சுமியின் வார்த்தைகளைச் சரிவரப் புரிந்து கொள்ளாமலே, 'நன்றாயிருக்கே' என்கிற மழுப்பலுடன் குடித்தாள்.

''என்னவோ ஆராய்ச்சி பண்ண வந்திருக்கியாமே என்ன ஆராய்ச்சி?''

ஒரு காலைச் சுவரில் ஊன்றியபடி நின்றிருந்த ருக்மிணியின் மடிசார் கொசுவம் லேசாக விலகிய இடத்தில் கணுக்காலின் வெளுப்பு மங்கிய வெளிச்சத்தில் தெரிந்தது.

''நம்ம கிராமப்புறத்துப் பெண்களோ இரண்டு தலைமுறையிலே எந்த மாதிரி வித்தியாசம் ஏற்பட்டிருக்குன்னு பார்க்கிற ஆராய்ச்சி.''

அவள் இன்னும் விவரமாகச் சொல்ல நினைத்துப் பிறகு சொன்னால் இவர்களுக்குப் புரியுமோ என்று சம்சயத்துடன் மௌனமானாள்.



## பாரதி - கல்கி போட்டி-2



பரிசு ரூ. 250. ஒருவருக்கு மேல் சரியான விடைகள் அனுப்பினால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும்.

முடிவு தேதி ஆகஸ்ட் 25.

உறையின்மேல் 'பாரதி-கல்கி போட்டி-2' என்று மறவாமல் குறிப்பிடவும்.

என் பெயர்: ______________

கையெழுத்து: ______________

விலாசம்: ______________

______________

______________

இந்த இதழில் போட்டிக் கதை தவிர மற்ற நாலு கதைகளுக்கும் பாரதி கவிதை வரிகளையே தலைப்புக்களாகத் தேர்ந்தெடுத்துத் தந்திருக்கிறார் பாரதி பக்தர் **இரா. சுராஜ்.**

இந்தக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். நீங்கள் எழுதி அனுப்பும் நாலு தலைப்புக்களும் அவர் எழுதித் தந்துள்ள தலைப்புக்களுடன் ஒத்துப்போனால்

| எழுத்தாளர் | கதைத் தலைப்பு |
| --- | --- |
| 1) வாஸந்தி | _ _ _ மு _ _ _ _ உ _ _ _ _ _ _ டு |
| 2) கோவி. மணிசேகரன் | _ _ செ _ ம் _ ஊ _ _ _ _ கே |
| 3) ருக்மிணி பார்த்தசாரதி | வி _ டு _ _ _ _ _ _ கி _ _ _ _ |
| 4) கமலா நடராஜன் | _ _ _ _ று பூ _ _ _ _ பி _ _ _ _ _ _ ல் |

ருக்மிணியின் அதரங்களில் ஒரு லேசான புன்னகை தெரிந்தது.

''என்ன வித்தியாசம்? நாற்பது வருஷமா இந்த ஊரிலே இருக்கேன். இதுவரைக்கும் எந்த வித்தியாசமும் ஏற்பட்டிருக்கிறதா எனக்குத் தெரியல்லே. நான் நுழைஞ்சப்பறம் ஒரு வெள்ளைகூட அடிக்கல்லே இந்த வீட்டுக்கு.''

''வெளிப்படையான வித்தியாசம் எனக்கு முக்கியமில்லே. மனசளவிலே வித்தியாசம் இருக்கலாம்!''

''ஆ, என்ன வித்தியாசம்?'' ருக்மிணியின் குரலில் ஒரு அலுப்புத் தெரிந்தது.

''சதா சர்வ காலமும் நாலு சுவத்துக்குள்ளே இருக்கிற ஜன்மங்களுக்குள்ளே என்ன மாறுதல் வந்துடப் போறது?''

குரலிலிருந்த கனிவு ஏற்படுத்திய திகைப்பு மாதிரி இந்த அலுப்பும் திகைப்பை ஏற்படுத்திற்று.

**சா**ப்பிடும்போது பாட்டியும் ருக்மிணியும் அவனை உபசரித்த உபசரிப்பு அவனைத் திக்குமுக்காட வைத்தது. ஒரு புடலங்காய் கூட்டுக்கும் தெளிவு ரசத்துக்கும் இத்தனை ருசி இருக்குமா என்று அதிசயம் ஏற்பட்டது.

''பார்த்துப் பார்த்து உபசரிக்க என்னால முடியாதுடா குழந்தே! இது உன் வீடா நினைச்சுண்டு கேட்டு வாங்கிச்சாப்பிடணும்!''

அந்தக் கனிவால் தாக்குண்டவனாய் அவன் சட்டென்று நிமிர்ந்து பாட்டியைப் பார்த்தான். அந்தக் குருட்டுக் கண்களை முதல் முறையாகப் பார்க்கையில் ஒரு திகைப்பு ஏற்பட்டது. அதில் ஏதோ பயங்கரம் தெரிந்தது. இயல்பான குருடாகத் தெரியவில்லை. அவன் தன் கலவரத்தை மறைத்தபடி சாப்பிட்டு முடித்து எழுந்தான். இன்னமும் எச்சுமியின் அப்பா 'வயப்பக்க'த்திலிருந்து வந்திருக்கவில்லை.

''நீ போய்ச் சித்த நேரம் படுத்துக்கோம்மா. மூணு நாள் பிரயாணம் செஞ்சிருக்கே பாவம்!''

அவன் நன்றியுடன் அவனுக்கென்று அவர்கள் ஒதுக்கியிருந்த அறைக்குச் சென்றான். தரையில் பாயை விரித்து மின் விசிறியில்லாமல் படுப்பதே அவனுக்கு விநோதமாக இருந்தது.

அவன் தன்னுடைய தீஸிஸ் எழுதுவதற்காக ஒரு தமிழ் நாட்டுக் கிராமத்துக்குப் போக வேண்டும். யார் வீட்டிலாவது சில நாட்கள் தங்க வேண்டும் என்று சொன்னபோது அப்பா தம் சொந்தக் கிராமத்தைப் பற்றிச் சொன்னார். உறவுக்காரர்கள் என்றுயாரும் இல்லாவிட்டாலும் தாத்தாவின் நண்பர்வீடுஇருக்கிறது என்றார்.

**அ**வன் தூங்கி எழுந்தபோது, எச்சுமி ஒரு கவலையிப்புடன் வெகு தீவிரமாக சுலோகங்களைச் சொல்லிக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் அவளை வேடிக்கை பார்த்துவிட்டு வானதி முற்றத்தின் குறட்டில் அமர்ந்து கொண்டாள். வெளிக் காற்று ஜிலுஜிலுவென்றிருந்தது. வெளியில் நீள

நடந்து விட்டு வந்தால் என்ன என்று தோன்றிற்று.

''என்னக்கா, தூங்கி எழுந்தேளா?''

''ஆமாம்,கொஞ்சம் நடந்துட்டு வரலாம். வர்யா எச்சுமி?''

எச்சுமியின் விழிகள் அகல விரிந்தன. ''எங்கே? வெளியிலேயா? விளக்கு வெச்சப்புறம் எங்கேயும் போக முடியாது!''

''ஏன்?''

''அப்படித்தான் இங்கே வழக்கம்!''

அவளுக்கு லேசாக அலுப்பேற்பட்டது. சட்! எந்த மாதிரி இடத்தில் வந்து மாட்டிக் கொண்டோம்!

எச்சுமி அவளருகில் வந்து உட்கார்ந்தாள். கறுகறுவென்று இருக்கும் இவளுக்கு இந்த மாதிரி ஒரு தேக்க வாழ்க்கை அலுப்பையும் ஆயாசத்தையும் தரவில்லையா என்று அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''டில்லிரொம்பவித்தியாசமாயிருக்குமா?''

''ரொம்ப!''

''எப்படி?''

''அது ரொம்பப் பெரிய பட்டணம். பல இனுக, பல பாஷை பேசகிற ஜனங்கள். கிராமத்திலே இருக்கிற கட்டுப்பாடுகள் எல்லாம் கிடையாது. பெண்கள் எல்லாம் அநேகமாப் படிச்சவா. ஆணுக்குச் சமமா வேலைக்குப் போறவா.''

அவள் தயக்கத்துடன் நிறுத்தினாள். எப்படி விவரித்தாலும் ஒரு யுகத்து வித்தியாசத்தை எச்சுமி எப்படிப் புரிந்துகொள்வாள்?

''நினைச்சேன்! நீங்க தனியா டில்லியிலேந்து வந்து இறங்கி வாசல்லே நின்னேண்ணே!''

''எச்சுமி! இங்கே ஸ்கூல் ஒண்ணும் கிடையாதா? நீ படிக்கவே யில்லையா?''

''இருக்கு. அஞ்சு கிளாஸ்வரை அதுலே படிச்சேன். மேற்கொண்டு படிக்க டவுனுக்குப் போகணும். அதுக்குள்ளே பெரியவளாயிட்டேன்.''

அந்தப் பளிச்சென்ற முகத்தையும் விசாலமான கண்களையும் பார்க்கப் பார்க்க ஒரு பரிதாபம் உள்ளே சுரந்தது.

''படிக்க வருமோ உனக்கு?''

''வரும். பக்கத்தாத்து சம்பா அவ வரவழைக்கிற தமிழ்ப் பத்திரிகைகளைக் குடுப்பா — அதைப் படிக்கிறதுதான் என் பொழுதுபோக்கு!''

''இதைத் தவிர மேலே படிக்கணும்னு உனக்கு ஆசையில்லையா எச்சுமி?''

''நடக்கிற காரியமானு ஆசைப்படணும். இந்தக் கிராமத்திலே இந்தாத்திலே பொறந்து அதிகப்படியா ஆசைப்பட்டா கண்ணும் அவிஞ்சுபோகவேண்டியதுதான்.''

வார்த்தைகளில் அதீதமான கடுமை தொனித்த மாதிரி இருந்தது.

''டில்லி என்னவோ ரொம்பப் பெரிய ஊரு. நிறையப் படிச்சவா இருக்கான்னு சொன்னேளே. அங்கேயும்தான் தினமும் எங்காவது ஒரு இடத்திலே நாட்டுப்பெண்ணை எரிக்கக் கொல்றாளாமே. வரதட்சணை போறல்லேன்னு! ஒரு பத்திரிகையிலே படிச்சேன்!''

வானதி லேசாகத் திடுக்கிட்டு அவளைப் பார்த்தாள். ''ஓ. ஆமாம்!'' என்றாள் சமீப காலமாக மிகப் பயங்கரமாகப் போய் விட்ட இந்தப் பிரச்னைக்குப் பின்னணியில் இருக்கும் பல்வேறு காரணங்களை விளக்கினால் இந்தப் பெண்ணுக்குப் புரியுமா என்கிற கேள்வி தோன்றிற்று.

இந்த 'ஸோஷியாலஜி'யை இந்தக் கிராமத்துப் பெண் எப்படிப் புரிந்து கொள்ளப் போகிறாள்?

''எங்க பாட்டியோட கண்ணை நீங்க பார்த்தேளா அக்கா?''

உடம்பில் மறுபடி ஒரு சிலிர்ப்பு ஊறிற்று.

''பார்த்தேன்!''

''எங்க பாட்டி எப்படி குருடு ஆனு தெரியுமோ? அவா புக்காத்திலே கொள்ளிக் கட்டையாலே கண்ணை அவிச்சுப்பிட்டா!''

''ஐய்யய்யோ? ஏன்?''

''சீதனம் கொண்டு வந்தது போதாதுன்னு கண்ணையும் குருடாக்கி, ஒரு மூட்டையைக் கொண்டு தள்ளற மாதிரி பொறந்தாத்திலே கொண்டு தள்ளிட்டாளாம். உங்க பொண்ணைப் பாத்துக்கோங்கோன்னு. ஊரும் மனுஷாளும் வாயை மூடிண்டு இருந்தாளாம். இந்த அநியாயத்தைப் பார்த்துண்டு. எங்க பாட்டி இன்னித் தேதி வரைக்கும் அழுத்திண்டதில்லே. இந்த மாதிரி ஜன்மங்கள் உங்க டில்லியிலே உண்டாக்கா?''

வானதிக்குக் காரணம் புரியாமல் கண்கள் பனித்தன.

''உனக்குக் கல்யாணம் இன்னும் ஆகல்லியா எச்சுமி?'' என்றாள் மெள்ள.

''ஆகியிருக்கே! பேருக்கு!''

சட்டென்று ஒரு திகைப்பு ஏற்பட்டது.

''என் கதையைக் கேட்க வேண்டாமோ நீங்க! படு தமாஷா இருக்கும்! கல்யாணம் நிச்சயம் பண்ணும்போதே ஏக பேரம் நடந்தது. இரட்டை வடம் சங்கிலியும் பத்து சவரனுக்கு வேணும்னு கேட்டா மத்த நகைகளோட. அப்பா அதுதான் கொஞ்சம் சிரமமாயிருக்கும். மெள்ளப் போடறேன்னார். ஒத்துக்கற மாதிரி இருந்துட்டு நிஜர்னு கல்யாணத்தன்னி ராத்திரி இரட்டை வடம் வந்தாத்தான் பெண்ணைப் பின்னேயிட்டே விட முடியும்னு. அந்தச் சமயத்திலே எங்கப்பா எங்கே போவார்? எங்க மாமா சட்டுனு விட்டுக்குப் போய் மாமியோட இரட்டை வடத்தைக் கொண்டு வந்தார். மாமி - செத்துப்போய் ரெண்டு மாசம் ஆகியிருந்தது. ''இது எனக்கு இனிமே உபயோகமில்லே. எச்சுமிக்கு அம்மான் சீராய் இருக்கட்டும்''னார். இதெல்லாம் என்ன சினிமா மாதிரின்னு எனக்கு அப்பவே திகைச்சுப் போச்சு. மாமியார் வரா. என் சங்கிலியைக் கழற்றிக் கையிலே எடை பார்த்து பத்துப் பவுன் இருக்குமான்னு கத்தி நிக்கறவாளைச் சந்தேகம் கேக்கறா. எனக்கு அவமானத்திலே கண்ணுலே ஜலம் வரது. ஒரு வழியா என்னை அவர் கிட்டே — எனக்கு அன்னிக்குக் காத்தாலே தாலி கட்டினவர் கிட்டக் கொண்டு விட்டா. ஒரு திக்பிரமையோடத்தான் போனேன். அவனாவது விவேகமாய் இருப்பான் என்கிற நப்பாசையிலே...




● 'சாதாரண மனிதன்' ஓர் அசாதாரணப் படைப்பு.
வடகாடு கே.என். செல்வரத்தினம்

● திருமதி லட்சுமியின் 'சாதாரண மனிதன்' தொடர்கதை மனத்தில் அசாதாரண பாதிப்புக்களை ஏற்படுத்தி உணர்வுகளை வருடியது. லக்ஷ்மியின் நாவல் பயணத்தில் மேலும் ஒரு மைல் கல்!
வடலூர் வெ. லட்சுமி நாராயணன்

● சாதாரண மனிதனை விட நான் மிகவும் நேசித்தது மாருதியைத்தான்.
கோயம்புத்தூர் டி. கே. கங்காராம்

● காதலித்துப் பார், கல்யாணம் செய்து பார், வீட்டைக் கட்டிப்பார் இவைகளில் எவ்வளவு சங்கடங்கள்ஒவ்வொன்றிலும்இருக்கின்றன என்பதை மிகவும் அழகாகவும், ஆழமாகவும் தம்முடைய 'சாதாரண மனிதன்' தொடர் நாவலின் மூலம் விளக்கி விட்டார் லக்ஷ்மி.
கும்பகோணம் திருமதி பிரசன்னு ராஜன்

● பல பெண் எழுத்தாளர்கள் பெண்கள் இயல்புக்கு மீறிய போக்குகளைத் தம் கதையில் படம் பிடித்துக் காட்டும் இக்காலத்தில், கிராமப்புறப் பெண்ணின்இயல்புகளோடு சந்தியாவையும், வயதான விதவைகளுக்கே உரிய உருக்கத்தோடு ஜகதா அத்தையையும் சாதாரண மனிதனுக்க் கிரிதரனையும் படைத்து, ஓர் 'அரிய காவியம்' படைத்திருக்கிறார் லக்ஷ்மி! அவர் திறம் பாராட்டுக்குரியது.
தென்காசி எஸ். எம். கே. சுவாமி

● எப்படி எப்படியோ எழுதும் எழுத்தாளர்கள் நிரம்பிய இக்காலத்தில் நிஜ வாழ்க்கை, கட்டுக்கோப்பான சம்பவங்கள் ஜீவனூட்டும் பாத்திரங்கள், இவற்றுடன், 'சாதாரண மனிதன்' கதையினைவழங்கிய லக்ஷ்மிக்கு இதயம் நிறைந்த பாராட்டுக்கள்.
கல்கத்தா-26 கே. கே. பாலசுப்பிரமணியன்

● லக்ஷ்மியின் 'சாதாரண மனிதன்' முடிவு ரொம்பவும் நன்றாக இருந்தது. மாருதியின் ஓவியம் கதைக்கு மெருகூட்டியது. எங்கள் பாராட்டுக்கள்.
சென்னை-88 வி. காயத்ரி

அவன்னே சொல்றேன். என்ன மரியாதை வேண்டிக் கிடக்கு?''

எச்சுமி சற்று நேரம் பேசாமல் ஆகாசத்தைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். பழைய நினைவுகளில் ஐக்கியமாகிப் போனவளாய். பிறகு எதிர்பாராமல் பெரிதாகச் சிரித்தாள்.

''அவன் என்ன பண்ணுன் தெரியுமோ? கிட்ட வருவான் முகவாயை நிமிர்த்துவான்னு நான் சினிமா கற்பனையிலே நிக்கறச்சே ''பத்து சவரன் இருக்குமோல்லியோ?'ன்னுன். ஒரு நிமிஷம் அவனு அப்படிக் கேக்கறுன்னு திகைச்சு நிக்கறேன். 'எங்கே கழட்டிக் குடு பார்க்கறேன்!'ன்னுன். மறுபடி. எனக்கு மளமளன்னு ஒரு ரௌத்திரம் கிளம்பித்தே பார்க்கணும்! ஒரு வார்த்தையும் சொல்லத் தோணல்லே. 'தூ!'ன்னு அவனைப் பார்த்துச் சொன்னேன். சடார்னு கதவைத் திறந்திண்டு கண்ணை மூடிண்டு ஓடி வந்தவதான்! அதுக்கப்புறம் அவன் கிட்டப் போகவே இல்லே! போக மாட்டேன்னுட்டேன்!''

வானதி ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தாள். 'இவளா!'

''மறுபடியும் அங்கே போகணும், புருஷனோட இருக்கணும்னு ஆசை ஏற்படலியா எச்சுமி?''

''ஆசைக்கென்ன, வெட்கம் கெட்டதுன்னு அது! ஆனு அதுக்கு மேலே ரோசம்னு ஒண்ணு இருக்கே!''

''எல்லாருக்கும் அது இல்லே எச்சுமி!''

''சின்ன வயசிலேந்து பாட்டியோட குருட்டுக் கண்ணைப் பார்த்துண்டு அதோட காரணத்தை நினைச்சுப் பொருமிண்டு வளர்ந்தவ நான். நானும் போய் மாட்டிக்கலாமா அக்கா?''

வானதி எதுவும் சொல்லாமல் தோழமையுடன் எச்சுமியின் கைகளைப் பற்றினுள்.

''இதனுலேதான் எங்கம்மா சொன்னு, இந்த ஊரிலே எந்த வித மாறுதலோ வித்தியாசமோ இல்லேன்னு. எங்க பாட்டியும் வாழாவெட்டியா வந்தா. நானும் இப்ப வாழாவெட்டி!''

அந்தச் சிரிப்பு அடிவயிற்றில் ஒரு சங்கடத்தை ஏற்படுத்தியது. அவள் கையை அன்புடன் அழுத்தியபடி வானதி மெல்லிய குரலில் சொன்னுள்:

''எனக்கு வித்தியாசம் தெரிகிறது எச்சுமி! நான் எதிர்பார்க்கிற வித்தியாசம்!'' மனசில் ஒரு பரவசம் பொங்கிற்று. எதிர்பாராமல் ஒரு திருப்பத்தைக் கண்ட மாதிரி.

''வாழாவெட்டிங்கிறது அநாகரிகமான வார்த்தை. நான் உன்னை வழிகாட்டின்னு சொல்லுவேன்!''

''நன்னுயிருக்கு! ஏற்கனவே என்னை அதிகப்பிரசங்கின்னு ஊர் தூத்திண்டிருக்கு!''

''தூத்தட்டும்!''

டில்லி பெரிய ஊரு, படிச்சவா இருக்கிற ஊருன்னேளே!

நிச்சயம் இது அதிகப்பிரசங்கித்தனமான பரிகாசம் இல்லேங்கிற உணர்வு அவளை வெட்கப்படுத்தியது.



"குடும்பப் பொறுப்புக்கு
ஈடு கொடுக்க கொள்ளைத்
தெம்புதேவை...எனக்கு
அள்ளித் தருகுது நான்
பருகும் விவா"













"குடித்தனம் நடத்துகிற பொறுப்புத்
தான், காலெல்லாம் பம்பரமாய்
ஓடியாடி உழைக்க வைக்கிறது
என்னை... அதுவும் உற்சாகத்தோடு
செய்கிறதைக் கச்சிதமாய்ச்
செய்கிறேன். நான் பருகும் விவா
எனக்கு வற்றாத தெம்பு தருகிறது.
பார்லி, கோதுமை இவற்றின்
மால்ட் சத்துக்கள், பால், வைட்டமின்கள்
அடங்கிய விவா ஜீரணிக்க எளிதானது.
பாலிலேயும் சரி, நீரிலேயும் சரி
கலக்க இலகு. சூடான பானமாகவோ,
குளிர் பானமாகவோ சுவையுடன்
அருந்தலாம். அலுக்காமல் உழைக்க
எனக்கு சளைக்காத தெம்பு—
தருகிறது விவா."

## "தெம்பு தரும் விவா உனக்கு நன்றி!"



மாண்ட் (உலக) தேர்வில் வெள்ளிப்
பதக்கம் வென்றது, ஆம்ஸ்டர்டாம் 1981

**JiL** ஜகத்ஜீத் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

ASP/JIL: V:3/2012 TM


மேற்கு வங்க
ஆட்சியில் உள்ள
இடதுசாரி கூட்டணி
யில் கருத்து
வேற்றுமை
தலை தூக்கியுள்ளது!
ஆறு மந்திரிகள் ராஜினாமா
இடதுசாரி கூட்டணி
ஜோதி பாசு




இ.காங்கிரசுக்கு
கை
சின்னத்தில்
வோட்டு
போடுங்கள்!
'கை' வரிசை!
அந்துலே


தாய்க் குலமே!...
கவலைப் படாதே!
லாட்டரி சீட்டு வாங்குங்க!
குழந்தை கீழே விழாது!
சத்துணவு திட்டம்



ஸ்ரீ கல்கி

1982 ஆகஸ்டு 8
துந்துபி ஆடி 23
மலர் : 41 இதழ் :2



# இன்றைய இளைஞர்களின் நாளைய இன்னல்கள்

நாட்டை ஆள்கின்ற தேசத்தலைவர்கள் ஒருவகையில் மக்களின் தந்தையர் போலத்தான். ஆட்சிக் காலம் முடியும்போது அடுத்த தலைமுறைக்கு இவர்கள் சொத்து சுதந்திரங்களை விட்டுச் செல்லலாம்; அல்லது கடன்சுமையையும் அடிமை வாழ்வையும் உருவாக்கிப்போகலாம்.

நம்முடைய இன்றையத் தலைவர்கள் இரண்டாம் ரகம். இவர்கள் நமக்குச் சொத்து சுதந்திரங்களை விட்டுச் செல்லாவிடினும் நற்பெயரை யாவது ஈட்டித் தரலாம் அல்லவா? அதுவுமில்லை! உலக அரங்கில் இந்தியனென்றாலே ஏளனமாகப் பார்க்கும் நிலை உருவாகிவிட்டது! திரும்பின பக்கமெல்லாம் லஞ்ச ஊழல்; பார்க்கும் இடமெல்லாம் தார்மீகச் சீர்குலைவு; பொருளாதாரச் சீரழிவு; வேலையில்லாத் திண்டாட்டம் — மக்கள் வறுமைக்கும் துன்பத்துக்கும் அடிமையாகிப் போனார்கள்.

விரும்புகிறோமோ இல்லையோ, இந்த அடிமை வாழ்வையும் கோடிக் கணக்கான ரூபாய் கடன் சுமைகளையும் இன்றைய இளைஞர் சமுதாயம் தான் நாளை ஏற்றாக வேண்டும்! இந்தப் பொறுப்பில் உள்ள இளைஞர்கள் இன்றே விழித்துக்கொண்டால் நல்லது. எப்படியெல்லாம் நடந்து கொள்ளக் கூடாது என்பதற்கு இன்றைய நமது தலைவர்கள் எடுத்துக் காட்டு என்பதைப் புரிந்து கொண்டு ஒரு புதிய தார்மீக எழுச்சியைப் பெறவேண்டும். இல்லையெனில் இந்த நாட்டை ஆண்டவனாலும் காப்பாற்ற முடியாது!

இன்றைய இளைஞர்களின் அறிவாற்றலிலும் தேச பக்தியிலும் அளவற்ற நம்பிக்கை கொண்டுள்ள காஞ்சி காமகோடி பீடாதிபதி, அவர்களை ஒன்றிணைத்துத் தங்களிடம் உள்ள மகத்தான சக்தியை உணரச் செய்து, வழிகாட்ட முன்வந்திருக்கிறார்.

ஜாதி மத வேறுபாடுகளையும், இன மொழி மாறுபாடுகளையும், வர்க்க பேதங்களையும் வகுப்புவாதங்களையும் பயன்படுத்தி மக்களைக் குழப்பி அதனால் பயன்பெறுகின்ற அரசியல்வாதிகளையும் மத வாதிகளையும் இனம் கண்டுகொள்ளுமாறு அவர் வேண்டுகிறார்.

''நாம் எல்லோரும் இந்தியர் என்ற உணர்வைப் பெறுவோம். அயல்நாட்டினரின் அறிவை அடைவோம்; ஆனால் ஆடம்பரத்தை ஒதுக்குவோம். அந்நியக் கலாசாரத்தை விட நமது பண்பாடு மிக உயர்வானது எனப் பெருமை கொள்வோம். நமது தாய்மொழி போலவே அனைத்து மொழிகளையும் நேசிப்போம். நம்மிடையே எத்தனை சாதி சமய வேறுபாடுகள் இருப்பினும் ஆண்டவன் மீது நம்பிக்கை கொண்டு ஆன்மீக ஒருமைப்பாட்டை அடைவோம். வகுப்புவாத துவேஷங்களை ஒழித்து, ஒருவரை யொருவர் மதித்து, ஒருவருக்கொருவர் உதவி வாழ்வோம். நல்லொழுக்கமும் பொறுப்புணர்ச்சியும் மிக்க தேசபக்தர்களாய்த் திகழ்வோம்'' என்கிறார்.

இதற்காக ''இந்திய இளைஞர் சங்கம்'' என்ற அமைப்பினை உருவாக்கி வளர்க்கவும் திருவுள்ளம் கொண்டிருக்கிறார். நாடெங்கிலும் உள்ள லட்சோப லட்சம் இளைஞர்களின் கவனத்தைக் கவர வேண்டிய லட்சியப் பணி.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

நீதிபதி: ''எம்பா நீ வக்கீல் வச்சுக்கலே?''
கைதி: ''நான் உண்மையைப் பேச விரும்பறேங்க.''

இருட்டுத் திரையை விலக்கிக் கொண்டு யாரோ விந்தி விந்தி நடந்து வருவது போலத் தோன்றியது. தெரு விளக்கு மூளியாய் நின்று கொண்டிருந்தது. நாலு நாளாய் எரியவில்லை. எதிர்க் குடிசையில் நார்க் கட்டில் போட்டு புருஷனும் பெண் சாதியும் வெற்றிலே போடுகிற சாக்கில் சரசமாடிக் கொண்டிருந் தார்கள். மேட்டுப்பாளையம் லேனில் பாசஞ்சர் ஓய்ந்து போய்க் கடந்தது. தெரு முனைத் திருப்பத்தில் படுத் திருந்த மண்ணெண்ணெய் வண்டிக்காரனின் நாய் விசுக் கென்று கழுத்தில் நெட்டை எடுத்து கொண்டு நடந்து வந்த வனை நோக்கிக் குரைத்தது.

நாட்ராயனுக்கு யார் என்று அடையாளம் புரியவில்லை.

எழுந்து புகையிலைச் சாற்றைப் புளிச்சென்று துப்பிவிட்டு உட் கார்ந்தான். வந்தவன் அருகே வந்துவிட்டான்.

''எருக்கம்பெனிப் பக்கமிருந்து வாறனுங்க. இங்க நாட்ராயனுங் கிறது யாருங்க?' என்று எந்த விதத் தயக்கமும் இல்லாமல் கேட்டதும்,



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் [82] ரூ-500/=

**இரண்டாவது**

பரிசு பெற்ற சிறுகதை:

நாட்ராயனுக்கு முதுகெலும்பில் ஒரு நடுக் கம் பற்றியது.

''யாரு நீங்க?'' என்று வந்தவனைத் திருப் பிக் கேட்டான்.

''சங்கனூர் முத்து அனுப்பிச்சாருங்க.''

நாட்ராயன் முத்து என்ற பெயர் காதில் விழுந்ததுமே எழுந்து கொண்டான்.

''யாரு தலைவருங்களா?''

''ஆமாங்க. என் பேரு பழனிப்பனுங்க.''

''உக்காருங்க. நான்தான் நாட்ராயன். என்னங்க விசயம்?''

பழனியப்பன் திண்ணையில் உட்கார்ந்தான். நாயின் குரைப்பு அடங்கியது. எதிர்க் குடி சைக்காரர்கள் அமைதியானார்கள்.

''மேட்டுப்பாளைய ரோட்ல, ரோட்டோ ரத்தில டீக்கடை வைக்கலாம்னு தலைவரைக் கேட்டீங்களாம். வெச்சா நாளை ராத் திரிக்குள் போட்டுக்கோணும்னு சொல்லி உட்டாரு. அதுக் குப் போட்டி ரொம்ப இருக்கு தாம். பணத்தை உடனே தர்ரோ ணும்னு சொன் ஒரு.''

''உடனேயா?''

''ஆமாங்க. மூவாயிரம் ரூபா தர்ரேன் னிட்டு நாலைஞ்சு பார்ட்டி வந்துட்டுப் போய்ட்டாங்க. நீங்க ரெடி இல்லேன்னு இன்னொரு பார்ட்டிக்குப் போய்ச் சொல் லோணும் நான்.''

நாட்ராயன் யோசிக்க ஆரம்பித்தான்.

மேட்டுப்பாளையம் மெயின் ரோட்டில் ஐ. டி. ஐ.க்கு அடுத்து பிரம்மாண்டமான தொழிற்சாலை ஒன்று உருவாகிக் கொண் டிருக்கிறது. அதற்கு எதிர்த்தாற்போலப் பருத்திக் காடு. வேலி ஆள் உயரத்துக்கு மதிலாய்க் கிடக்கிறது. அதை ஒட்டி ரோடைப் பார்த்தாற்போல் பத்துக்கு இரு பதாய்த் தென்னங் கீற்றுகளை வேய்ந்து ஒரு கடை வைத்தால் வியாபாரம் நன்றாக



ஓடும். அந்த ஏரியாவில் தலைவர் முத்துவின் சம்மதத்தைப் பெறாமல் யாரும் கடை போட முடியாது. ஏற்கனவே பலர் அவர் சொல்லித்தான் கடைகளும், குடிசைகளும் போட்டிருக்கிறார்கள். இத்தனைக்கும் அது நெடுஞ்சாலைத் துறையினரின் அதிகாரத்துக்கு உட்பட்ட இடம்.

நாட்ராயனுக்குச் சபலம் கிளர்ந்தது. இதை விட்டால் போச்சு. தினசரி நூறு ரூபாய்க்கு மேல் வியாபாரம் ஆகும். இப்போது ஒரு தள்ளு வண்டியில் தெருத் தெருவாய் டீ, வடை, பஜ்ஜியுடன் அலைகிறான். முப்பது ரூபாய் வியாபாரம் ஆவதற்குள்ளாகவே 'பிறந்த நாள்' கண்டு விடுகிறது.

''ஒரு நிமிஷம் இருங்கணேன்'' என்றவன் எழுந்து குடிசைக்குள் புகுந்தான்.

''டேய் ருக்கு, கொஞ்சம் எழுந்திரி....'' என்று எழுப்பி விஷயத்தைச் சொன்னான்.

''அங்க எடம் கிடைச்சா வியாபாரம் நல்லாத்தான் ஆகும். ஆனா ரெண்டாயிரத்துக்கு எங்க போறது?'' என்று சொல்லிக் கொட்டாவி விட்டாள். கொட்டாவி விடும்போது கழுத்துக்குக்கீழிருந்தபகுதிகளில் அவள் போட்டுக் கொண்டிருந்த ரெட்டைப் பவுன் சங்கிலி இரண்டும் ஒன்றுக் கொன்று வெளிச்சமாக்கின.

''எங்கிட்ட ஆயிரத்து எண்ணூறு இருக்கு. மண்ணெண்ணெய்க்காரங்க கிட்ட சீட்டுப் போட்டமே, இந்த மாசம் நமக்குத்தான் உளுந்திருக்கு. காலைல கூட அவன் கிட்ட வாங்கிக்கலாம். மீதியை உன்ற சங்கிலியை அடமானம் வச்சு வாங்கிறலாம். எப்படியும் கடைக்குச் செலவு பண்ணோணும். மூணு பக்கம் பலகை அடிக்கோணும். மொதல் போட்டால்தானே கடை வெக்க முடியும்?''

''இருக்கிறது இந்தச் சங்கிலிதான். கண்ணாலத்துக்கு எங்கப்பா போட்டது. இதையும் அடமானம் வெச்சுட்டீன்னா மூளியாக் கெடக்கிறதா!''

''வியாபாரம் சூடு புடுச்சா இந்தச் சங்கிலி என்ன? ஆறு மாசத்துக்கு ஒண்ணொண்ணாப் பண்ணிப் போட்டுறலாம்... சரின்னு சொல்லு ருக்கு.''

''ஒரு தரத்துக்கு ரெண்டு தரமா விசாரிச்சுப் பணத்தைக் கொடுங்க'' என்று ரெண்டு நிமிஷம் யோசிச்சுச் சம்மதம் கொடுத்தான் ருக்கு.

வெளியே வந்த நாட்ராயனிடம் ''அப்படின்னா உங்களுக்குச் சம்மதம்தானே?'' என்று பழனியப்பன் குறுக்கிட்டான்.

''ஆமாங்க. தலைவர் கிட்ட நாளைக்குப் பதினொரு மணிக்குள்ள வந்து பணத்தைக் குடுத்துர்றேன். சொல்லிருங்க அவரு கிட்ட''

''சரிங்க. நான் வரட்டுங்களா?'' என்று பழனியப்பன் எழுந்து கொண்டான்.

மூன்றாவது நாள் காலையில் ராகுகாலம் தவிர்த்து நாட்ராயன் தன் டீக்கடையைத் திறப்பு விழாச் செய்தான். முதல் டீயைத் தலைவர் முத்து, காசு கொடுத்து வாங்கிக் குடித்தார். அவருடைய தொண்டர்கள் திரளாக வந்திருந்து கடையைச் சிறப்பித்தார்கள்.

''நாட்ராயன், கடை சீக்கிரமா உன்னை முன்னுக்குக் கொண்டு வந்துடும். தெனம் நூறு டீக்குக் குறையாம ஓடும். அருமையான சென்டர். இப்பிடி ரோடு மேலே கடை வெக்கணும்னா இந்தக் காலத்துல எத்தனை ஆயிரம் ஆகும்? உனக்கு அதிர்ஷ்டம் இருக்குது.'' தலைவர் முத்து தம் பரிவாரங்களுடன் புறப்பட்டு விட்டார்.

மூன்றாவது வாரம் ஒரு மத்தியானம். தொழிலாளர்கள் அப்போதுதான் கூட்டம் கூட்டமாக வந்து வடையும் பஜ்ஜியும் டீயும் சாப்பிட்டு விட்டுப் போய்க் கொண்டிருந்தாகள். நாட்ராயனுக்கு முதுகுப் பள்ளத்தில் வேர்வை ஊற்றெடுத்தது. சாலையில் போலீஸ் வேனில் ஸ்பீக்கர்வைத்து மைக்கில் எச்சரிக்கைக் குரல் கேட்டது. அந்த வார்த்தைகள் நாட்ராயனின் நெஞ்சைப் பிளக்கும் விதமாக எய்யப்பட்டு ஊடுருவின.

''சாலையின் ஓரங்களில் அரசாங்கத்துக்குச் சொந்தமான இடங்களில் குடிசைகளும் கடைகளும் போட்டு ஆக்கிரமித்துக்கொண்டிருப்பவர்களுக்கு ஒரு எச்சரிக்கை. இது சட்ட விரோதமான செய்கை. மூன்று நாள் கெடு தருகிறோம். அதற்குள் எல்லாவற்றையும் காலி செய்துவிட வேண்டும். இல்லையென்றால் முழுதும் இடித்துத் தரை மட்டமாக்கப்படும்.''

''இவங்களுக்குப் பொழப்பு என்னங்க? வருஷக் கணக்கா, மைல் கணக்கா, நம்மளது மாதிரிக் கடைகளும் ஊடுகளும் மொளச்சுக் கெடக்குது. இந்த வழியா மொதம் மந்திரியும் மத்த மந்திரிகளும் எத்தனை தபா போனாங்க? அப்பவே நம்மளைக் கண்டுக்கலை போலீக. இப்ப என்ன திடீர்னு வந்துருச்சுங்க? ஏதாவது பணம் கிணம் கெடைக்குமான்னு இந்த மெரட்டலுங்க. நம்ம தலைவருகிட்டச் சொன்னாப் போதுங்க. இந்தப் பசங்க நம்மளுக்குச் சலாம் அடிச்சுட்டுப் போவாங்க...'' என்று சிரிப்பது போலப் பாவனை செய்து கொண்டு டீ போடப் போனான் நாட்ராயன்.

இருந்தாலும் அவன் மனசுக்குள் முள்றுத்தியது.

''எதுக்கும் தலைவரைப் பார்த்துட்டு வந்துருங்க'' என்று மனைவி தூண்டினாள்.

''அவரு போறப்பக் கடைக்கோணுமே ஆயிரம் ஜோலி இருக்குமே?'' என்று தயங்கினாலும், சாயந்திரம் சட்டைக்கும் வேட்டிக்கும் இஸ்திரி போட்டு உடுத்திக்கொண்டு சங்கனூரர் போனான். தலைவர் வீட்டுக்கு முன்னால் ஏற்கனவே பத்துப் பதினைந்து பேர் குழுமி இருந்தார்கள். அதில் நாலைந்து பேர் நாட்ராயனுக்குத் தெரிந்தவர்கள்தான்.

அவனைப் பார்த்ததும் ஒருவர், ''என்ன நாட்ராயன், இந்தப் பக்கம்?'' என்று கேட்டதும், மெதுவான குரலில் தனக்கு வரக்கூடிய ஆபத்தைத் தெரிவித்தான்.

''இங்க வந்திருக்கிற அல்லாமே அப்படிப் பணத்தைக் குடுத்து ஏமாந்து பயத்தை மடியில் போட்டுக்கிட்டு வந்திருப்பவங்கதான். தலைவர் முத்து உள்ளே தூங்கிக்கிட்டு

இருக்காருன்னு சொன்னுங்க.... உனக்காவது மூணு நாளு கெடு கொடுத்தாங்க. எங்களுக்கு ஒரே நாளுதான். இன்னைக்குச் சாயந்திரம் அஞ்சு மணிக்கு நம்ம கடையைப் பிரிச்சுப் போட்டுட்டுப் போயிட்டாங்க... சாமான்க நடு ரோட்ல கெடக்குது. பசங்களை எடுத்து வைக்கச் சொல்லிட்டு இங்க வந்தேன்....''

நாட்ராயனுக்கு நடு வயிற்றில் பயம் பற்றிச் சுழன்று சுழன்று எரிந்தது.

தலைவரிடம் விஷயம் சொல்லப்பட்டது.

''இதுக்குத்தானு?... நாளைக்குப் பார்த்துக்குறேன்.. மனசுல வச்சுக்காதே டேய் பழனிப்பா. இவங்களுக்கு எல்லாருக்கும் காப்பி கொண்டாந்து வை.'' என்று உரக்கச் சொல்லிப் பயத்தின் வேர்களை அடியோடு கெல்லி எறிந்தார்.

நாட்ராயனுக்கு இருந்த மனச் சிதைவில், பயச் சிதைவில் எதையும் குடிக்கத் தோன்றுமல் தன் கடைக்குத் திரும்பினுன்.

அடுத்த நாள் மத்தியானம் பழனியப்பன் வேகு வேகு என்று வந்தான்.

''என்ன மச்சான், தலைவரு என்ன சொன்னரு?'' என்று ஆவலுடன் கேட்டான்.

''நம்ம ஆடலரசு — அதான் தலைவருக்கு வலது கை — அவருக்கு வேண்டிய ஆளுக்கு மெட்ராசு அய் கோர்ட்ல கேசு இருக்குதாம். அதுக்கு யாரையோ புடிக்கோணும்னு இப்பத்தான் கோவை எக்ஸ்பிரசில பொறப்பட்டுப் போருங்க. போனு ஒரு வாரத்துக்கு மேலாகுமாம். உங்க கிட்டச் சொல்லச் சொன்னரு...''

''அப்ப இவங்க கடையை எடுக்கச் சொன்னு?'' — நாட்ராயன் திகிலுடன் கேட்டான்.

''நான் சொன்னுக் கோபிச்சுக்கக் கூடாது. தலைவரு உங்களை ஏமாத்திட்டாரு. இவருக்கும் கடை எடுக்கச் சொல்ற அய்வேசுக் காரங்களுக்கும் ஒரு கனெக்‌ஷனும் கெடையாது. சும்மா அப்படி இருக்கிற மாதிரிச் சொல்லி, உங்க மாதிரிப் பலபேர் கிட்டப் பணம் வாங்கியாச்சு....''

''அப்படீன்னு, எங்கிட்ட மொதல்லே ஏன் சொல்லல்லே?'' என்று நாட்ராயன் பழனியப்பன் சட்டையை ஒரு வெறியோடு பிடித்தான்.

''பாத்தியா, இந்தக் கோபம்தான் வேண்டான்னு சொன்னது. மொதல்லியே தெரிஞ்சிருந்தா நான் சொல்ல மாட்டேனு? இப்பத்தான் அவரு தண்ணி மப்புல பேசிட்டிருந்தப்ப எனக்குத் தெரிஞ்சது...''

மூன்றுவது நாள் காலேலேயே சைக்கிளில் போன யாரோ ஒருத்தர், வெளியே நின்று பல் விளக்கிக் கொண்டிருந்த ருக்குவைப் பார்த்துச் சொல்லிக் கொண்டு போனுர்.

''ஏம்மா ரோடு மேலே இருக்கிற குடிசைகளையும் கடைகளையும் ஹைவேசுக்காரன் புடுங்கி அக்கட்டால எறிஞ்சுக்கிட்டு இருக்கான். கவுண்டம்பாளையம் பிரிவு வரைக்கும் வந்தாச்சு. அவன் வர்றதுக்குள்ள கடையைப் பிரிச்சு எடுத்துடுங்க.''



வீட்டுக்கு வரும் விருந்தினர்களுக்கு நாம் தாம்பூலம் வைத்து உபசரிப்பது போல பர்மியமக்கள் சுருட்டு அளித்துத்தான் கௌரவிப்பார்கள். - பி. நாராயணன்

ருக்கு பதறிக் கொண்டு உள்ளே வந்தாள். நாட்ராயன்மட போட்டுக் கொண்டிருந்தான். அவள் பதறுதலைக் கண்டு கோபம் வெடிக்க ''நீ ஏண்டி பேயைக் கண்டவ மாதிரி தொறந்துட்டு வர்றே?... வர்றவன் வந்து புடுங்கட்டும். நானு ஒண்ணும் செய்ய மாட்டேன்'' என்று கத்தினுன்.

''ஆமா, இப்ப எம் மேலே நாயாட்டம் உறுங்க. எந்தப் பொறம்போக்கு நாயோ மொத்தப் பணம் புடுங்கிட்டு கெவர்னரு மாதிரி ரோடு மேலே கடை போட்டுட்டுப் போடான்னு பர்மிசன் குடுத்துட்டான். அவனை நம்பி நாமளும் நகை நட்டை வித்துப் போட்டுட்டோம். இப்ப கெவுர்மெண்டுக் காரங்களே வந்து எடுங்கடான்னு வாசல்ல நிக்கப் போறுன். பொறம்போக்கு யாருன்னு இப்பத் தெரியுதுங்களா? தலைவரு தலைவ'ருன்னு ஆகாசத்துக்கும் பூமிக்கும் குதிச்சீங்களே!''

''என்ற உஷ்ணத்தைக் கௌறாதே.அவன் மெட்ராசிலிருந்து ஊருக்கு வரட்டும்...'' ஒரு கெட்ட வார்த்தை சொல்லி, ''கொரலுவளையக் கடிச்சுத் துப்பல நான் ஒரு அப்பன் அம்மாவுக்குப் பொறக்கலேன்னு அர்த்தம்... பொறுக்கி நாயி...'' நாட்ராயன் கடைசி கூலையைப் போட்டு ஆற்றிக் கொடுத்து விட்டு வெளியே வந்து பார்த்தான்.

பத்துப் பன்னிரண்டு புளியமரங்களுக்குத் தெற்கே ஒரு போலீஸ்லாரிநிறையப் போலீஸ் காரர்களுடன் ஒரு டிராக்டர் பின்தொடர வந்து கொண்டிருந்தது. டிராக்டரில் தொழிலாளர்கள் போன்று தோற்றமளித்த இருபதுக்குமேற்பட்டமுரட்டுத்தனமான ஆட்கள் கடப்பாரையுடன் எமகிங்கரர்கள் போல் நின்று கொண்டிருந்தனர்.

மௌனமாகத் திரும்பி நாட்ராயன் கடையின் கூரையாகப் போட்டிருந்த தென்னங்கீற்றைப் பிரிக்க ஆரம்பித்தான். ருக்கு உள்ளே இருந்த சாமான்களை ஒவ்வொன்ருகக் கொண்டு வந்து வெளியே வைத்தான். இருவருக்கும் மனசு ரணமாகிக் கண்ணீர் ரத்தமாக அடக்க மாட்டாமல் பொங்கிற்று.




வன்முறை அரக்கனை வணங்குகிறார்கள் என்ற பயனுள்ள கட்டுரைக்கு நன்றி! உள்ளத்தில் ஊறிக்கொண்டிருக்கும்போதே 'காமிராவைச் சுற்றி' பகுதியில் சகல கலா வல்லவனில் வரும் வன்முறைக் காட்சியைப் போட்டு அந்த நன்றி ஊறும் ஊற்றுக் கண்ணை அடைத்து விட்டீர்களே!

திருச்சி — என் பாலு

எனது சகோதரியின் கார்டு புதுப்பித்தல் சம்பந்தமாக சென்னை நந்தனம் வேலை வாய்ப்பு அலுவலகம்சென்றிருந்தேன். காலையிலிருந்து மாலைவரை காத்திருக்கிறார்கள். கடுமையான வெய்யிலில் கால் கடுக்க நின்றிருக்கும் இவர்கள் குடிக்க நீருக்காகப் படும் அவதி சொல்லொண்ணாதது. வேலைதான் உடனே தரமுடியவில்லை. அங்கே குடிநீர் வசதியேனும் செய்து தரக் கூடாதா?

சென்னை-81 — இரா. தங்கராசன்

எத்தனையோ புத்தகங்கள் வெளியாகும்போது கலைஞரின் புத்தகத்தை அறிமுகப்படுத்துகிறீர்கள். பாராட்டலாம். அற்புதமான சேவையென்று! ஆயின்... 'குணம் நாடி, குற்றமும் நாடி' என்பதற்குப் பதில் குற்றமே நாடித் தேடியது போல் விமர்சனம் காட்சியளிக்கிறது. ஓர் அரசியல்வாதி கிடைக்கிற மேடைகளில் எல்லாம் தன் அரசியல் கருத்துக்களுக்கு வலுத் தேடத்தானே முயற்சி செய்வான்? இதைக் கூடவா கல்கி விமர்சகர் மறந்து விட்டார்?

தென்காசி — எஸ்.எம்.கே. சுவாமி

ஓவியர் வினுவின் ஓவியத்தைக் கல்கி அட்டையில் கண்டு எவ்வளவு நாட்களாகி விட்டன! சித்திரத் தொடர் என அறிந்ததும் வீட்டு வாண்டுகள் ஒன்றாக ''கல்கி மாமாவுக்கு தேங்க்ஸ்'' என்று குரல் கொடுத்துள்ளனர்.

வியாசர் காலனி — திருமதி நாராயணராவ்

மதுவிலக்குக் கொள்கையில் ஒரு நிலையான முடிவை எடுக்காமல், சமாளிக்கும் எம். ஜி. ஆர். நிலையை விளக்கும் கார்ட்டூன் ஏ. ஒன்.

தஞ்சாவூர் — தேவதாஸ்

வாரேவா! எல்லாப் பத்திரிகைகளும் படத் தயாரிப்பாளர்களுக்குச் சாதகமாக எழுத, நீர்மட்டும் துணிந்து சென்னாருக்கு ஆதரவளித்துள்ளீரே! உம் வாதத்திலும் நியாயம் இருக்கு!

மதுரை-16 — ஆர். வி. பிரசாத்

கண்ணம்மாப்பேட்டை வாசிகளான நாங்கள் சுமார் மூன்று வருட காலமாக ஒரு மைல் தூரம் சென்று தண்ணீர் எடுத்து வருகிறோம். ஓரிரண்டு நாட்கள் அத்தண்ணீர் கூடக் கிடைப்பதில்லை. 'தீர்ந்தது தண்ணீர்க் கஷ்டம்' இன்டல் கட்டுரையின் தலைப்பு நிஜமாகுமா என்று பார்ப்போம்.

சென்னை-17 — கே. சங்கர்

தண்ணீர்ப் பிரச்னை தமிழகத்தில் எழுவது இன்று நேற்றல்ல. நாடு சுதந்திரம் அடைந்த நாளிலிருந்து ஆட்சியில் வருகிறவர்களுக்குத் தலைவலி தருகிற பிரச்னையாகவே இருந்து வருகிறது. தண்ணீருக்காகப் பிற மாநிலத்தையும் மழையையும் நாம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் வரை இப்படித்தான் அல்லல் பட்டாக வேண்டும். இதை மாநிலப் பிரச்னையாகக் கருதாமல் மத்திய அரசு பொதுப் பிரச்னையாகக் கருதித் தீர்வு கண்டாக வேண்டும்.

தூத்துக்குடி — இரணியல் கலை

பத்தாம் பசலித்தனத்துக்குப் பளீரென்று சவுக்கடி கொடுத்திருக்கிறார், தேவிபாலா. 'ஒரே முத்தம்!' என்ற தலைப்பைக் கண்டு, ஏதோ ஆபாசக் கதையோ என அருவருப்போடு படிக்க ஆரம்பித்தேன். முடிவு மனத்துக்கு நிறைவாக இருந்தது.

எழுத்தாளருக்குப் பாராட்டுக்கள்!

புதுவை — இரா. தாமோதரன்

''ஹை(ே)ஜாக்''கைப் படித்துவிட்டு நான் சத்தமிட்டுச் சிரித்ததால் எதிர்த்த வீட்டு நண்பர் ''கல்கி''யை ஹைஜாக் செய்து கொண்டு போய்விட்டார்.

மதுரை-30 — பி. ராஜசேகரன்

வெறும் கையெழுத்தை மட்டும் பார்த்து மயங்கி பத்து ரூபாய் பரிசு வழங்கிவிட்டீர்களா? அந்த ஜோக்கைப்படித்து உண்மையிலேயே யாராவது சிரித்திருந்தால் அந்த நபருக்கு நான் பத்து ரூபாய் பரிசு வழங்கத் தயார்!

பெங்களூர்-11 — வித்யாசாகர்

இந்த வாரம் கடுகு தாளித்த 'சிக்கனத் திலகம் கமலாவின் யோசனைகள்' சிரிப்பை வரவழைத்தன. பேனாவைத் துடைத்த கறைத் துணியிலிருந்து இங்க் பெற நானும் முயன்று வருகிறேன்.

வடகாடு — கே.என். செல்வரத்தினம்

குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

# நீங்கள் புட்டிப்பால் கொடுக்கும் அவசியம் நேரும்போது கவனமாய் இருங்கள்.

## கீழ்க்காணும் 5 முக்கியமான குறிப்புகளைப் பின்பற்றுங்கள்...

**1.** தொற்று கிருமிகளைத் தவிர்த் திடும் வகையில் பீடிங் பாட்டில், நிப்பிள், மற்றய பாத்திரங்கள் ஆகிய வற்றை நன்கு சுத்தம் செய்து நீரிலிட்டுக் கொதிக்கச் செய்யவும். இல்லையெனில் பாலில் எளிதில் கிருமிகள் தோன்றிவிடும்.

**2.** நீரை பத்து நிமிடம் கொதிக்க வைத்து, உடல் வெப்பத்தைவிட சிறிது அதிகமாகவே ஆற வைத்த பின் பால் பவுடரைக் கலக்கவும்.

**3.** அதிக நீரை கலந்திடாதீர்கள், அதனால் சத்து குறைந்து விடலாம். டின்னின் மேல் கொடுத்துள்ள பால் புகட்டும் அட்டவணையைப் பின்பற்றவும்.

**4.** ஒவ்வொரு முறையும் குழந்தைக் குப் புதிதாக பாலைத் தயாரிக்கவும். மீந்துவிட்ட பாலை குழந்தைக்கு கொடுக்காதீர்கள், அதில் கிருமிகள் தோன்றி கெட்டுவிடுகிறது.

**5.** டின்னின் மேல் கொடுத்துள்ள எல்லா விதிமுறைகளையும் பின் பற்றவும். ஏதாவது சந்தேகம் இருப்பின் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.

## வாங்குவீர் க்ளாக்ஸோ சன்ஷைன்—நம்பகமான குழந்தைப் பாலுணவு

க்ளாக்ஸோ சன்ஷைன் சரிவிகித ரீதியில் சரியான அளவு புரதம், கொழுப்பு, கார்போஹைட்ரேட், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், இரும்புச்சத்து போன்றவற்றைக் கொண்டது. இது சுகாதார முறை யில் தயாரிக்கப்பட்டு, டின்னில் அடைக்கப் படுகிறது. குறிப்பாக குழந்தைகளின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்றது.









க்ளாக்ஸோ

—தாய்மார்களின் நம்பிக்கைக்குரியது.

CASGLS-IR-203 TAM



நண்பர்: படம் ரிலீஸ் ஆகும் முன்பே உங்க பத்திரிகையில் கரெக்டா விமரிசனம் வந்து விடுகிறதே அது எப்படி?

பத்திரிகை ஆசிரியர்: ஜோதிடப் பகுதி ஆசிரியரைக் கொண்டு பட விமரிசனம் எழுதச் சொல்கிறோம்!

— எஸ். பாலு

கணேஷ் தன் பெற்றோரிடம் தேவகிக்குப் பதில் அவன் வீட்டில் வளைய வந்துகொண்டிருந்த துளசியைக் கைகாட்டிவிட்டபோது அவர்களுக்கே அந்த மாற்றத்தைச் சட்டென்று ஏற்றுக் கொள்ள முடியவில்லை. என்றாலும் படித்தவன், நிலைக்கு உயர்ந்தவன், குடும்பத்தின் எதிர்காலத்தைத் தன் கையில் தாங்கப் போகிறவன். அவன் ஆசையை அவர்கள் நிராகரிக்க முடியுமா?

''தேவகி நான் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்கப் போவதில்லே'' என்றாள் துளசி.

தேவகி சிரித்துக் கொண்டே உயிர்த் தோழியிடம் சொன்னாள்:

''ஒருத்தருக்கு ஒண்ணு பிடிக்கறதோ பிடிக்காததோ அவரவர் மனோபாவத்தைப் பொறுத்தது. இதில் மத்தவங்க அவமானப்பட என்ன இருக்கு? என் மேலே உனக்கு உண்மையான அன்பிருந்தா நிஜமான மதிப்பிருந்தா இந்தக் கல்யாணத்துக்கு நீ சம்மதிச்சே ஆகணும்.''

அப்புறமும் துளசி அரை மனதாகத்தான் சம்மதித்தாள்.

# கமலா நடராஜன்





''என்ன சார், மொத்தம் ஒரே ஒருத்தர்தானே என் பேச்சைக் கேட்க வந்திருக்கார்... எதுக்கு இத்தனை போலீஸ்பந்தோபஸ்து?''

''அவரும் எழுந்து போயிடாம இருக்கத்தான்!''

— ஜி. நடராஜன்



வெறும் வார்த்தைக்காக அல்ல. மனப்பூர்வமாகவே தன் சிநேகிதிக்குக் கிடைத்த அதிருஷ்டத்தில்தேவகிக்குச்சந்தோஷம்தான்.

கணேஷ் அழகாக இருந்தான். கௌரவமாகத் தெரிந்தான். நல்ல வேலையும் சம்பளமும். ஒரு பெண்ணுக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?

அருமைச் சிநேகிதிக்காக ஒரு தியாகம் செய்து விட்டதுபோல் பெருமைப் பட்டுக் கொள்ள இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்ததில் தேவகிக்கு நிறைய சந்தோஷம்.

இந்த இரண்டு மூன்று வருடங்களில் துளசியிடமிருந்து அவளுக்குப் பல கடிதங்கள். அனைத்தும் அவளது நலமான வாழ்வின் இனிதான பிரதிபலிப்புக்கள்.

இந்தக் கோடை விடுமுறையில் கடிதம் எதுவும் முன்கூட்டியே எழுதாமல் திடீரென்று எதிரே போய் நிற்க முடிவு செய்து விட்டாள்.

**ம**தியம் மணி இரண்டு முப்பது.

இன்னும் இரண்டே மணி நேரத்தில் துளசியின் எதிரில் இவள். நினைவுகள் தேனாக இனித்தன.

பஸ்ஸுக்குள் கூட்டம் வெகுவாகக் குறைந்திருக்க—

புறப்படும் நேரத்தில் ஒரு நடுத்தர வயது மாதும் அவளைத் தொடர்ந்து ஓர் இளம் பெண்ணும் ஓடிவந்து ஏறினர்.



தேவகியின் சீட்டுக்கு எதிர் சீட்டில் வந்து அமர்ந்தனர்.

அந்தப் பெண் அழகாய் இருந்தாள். கர்ப்பமாகவும் இருக்கிறாள் போலும். நிறை மாதமோ என்னவோ வயிறு மிகப் பெரிதாய்....!

''சௌகரியமா உட்கார்ந்துக்கம்மா'' — என்றாள் — அந்தப் பெண்ணின் தாயார்.

''நீ எந்த ஊரம்மா போகணும்?'' — அந்தப் பெண்ணின் தாயார் கேட்க...

''ஸ்ரீரங்கம்.''

''அப்படியா? நாங்களும் அங்கேதான்.''

''இது உங்க பெண்ணா?''

''ஆமாம். ஒரே பொண்ணு. இங்கேதான் கொடுத்திருக்கோம். இது மாசம். கல்யாணமானப்புறம் கொஞ்ச நாள் தொடர்ந்தாப் போலன்னு இப்போதான் அழைச்சிட்டுப் போறேன். மாப்பிள்ளைக்கும் அவங்க வீட்டாருக்கும் இவ மேலே உசிரு. இப்போ தலைப் பிரசவம்சறதினாலே அனுப்பி வைக்கிறாங்க. எப்படியோ இவ சந்தோஷமாக இருக்கா. அதுதானே நமக்கு வேணும்.''

தேவகிக்கு மீண்டும் துளசியின் நினைவு.

அவள் கடிதங்களிலும் இதே விவரம்தான் ஒருசில முறை ஊருக்கு வந்தபோதுகூடத் துளசி உடனுக்குடன் புறப்பட்டும் போய் விட்டாள். 'அவரால் என்னைப்பிரிந்து இருக்கவே முடியாது' என்பாள். ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் என்று ஆகிவிட்டால் அப்படித்தான்.

''ஏம்மா, ஸ்ரீரங்கத்தில் நீங்க எங்கே இருக்கீங்க?'' தேவகி கேட்டாள்.

''வ. உ. சி. தெரு. நீ எங்கேம்மா போகணும்?''

தேவகியை ஏதோ ஓர் உள்ளுணர்வு தடை செய்தது.

''கோவிலுக்கு. ஸ்ரீரங்கனிடம் ஒருபிரார்த்தனை.'' — மாற்றிச் சொன்னாள்.

''ஸ்ரீரங்கத்தில் யார் இருக்கா?''

''ஒரு தோழி இருக்கா துளசின்னு.''

''எங்கதெருவிலேயே ஒரு துளசி இருக்கா. அவஒரு பாபப்பட்ட ஜென்மம்மா.பெண்ணாப் பிறந்து கஷ்டப்படற எத்தனையோ பேரை நான் பார்த்திருக்கேன். ஆனால் இவ கஷ்டம் யாருக்குமே ஆகாது.''

தேவகி திடுக்கிட்டாள்.

''என்ன சொல்றீங்க?''

''ஆமாம், அவ புருசன் தான் பாங்க் பணத்தைக் கையாண்டுட்டு ஆறு மாசம் செயிலுக்கும் போயிருந்தானே. பாவம், அந்தப் பெண்ணோட அப்பா அம்மா ஒரு தடவை வந்தப்போ கூட புருஷனை ஆறு மாசம் வேற ஊருக்கு மாத்தியிருக்கிறதா சொல்லி இந்தப்பெண் சமாளிச்சு அனுப்பினா. இப்போ ஏக வறுமை. கஷ்டம். பலன் இவளுக்குத்தான் அடி உதை.''

தேவகியின் இதயத்தில் ரத்தம் கசிந்தது.

''ஒரு படிச்சவரா இப்படிக் காரியமெல்லாம் பண்றார்?''

''படிச்சு என்னம்மா பிரயோசனம்? மனுஷனுக்கு அறிவும் பொறுப்பும் வேண்டாம்? இப்படி அழகும் குணமும் உள்ள ஒரு பெண்ணைக் கட்டிக்கிட்ட பிறகும் எவனாவது ஊரைச் சுத்தியும் குடி சீட்டாட்டம்னும் அலைவானா? புள்ளைக்குக் கல்யாணம் பண்ணிட்டாப் புது மனுஷனா மாறிப்போவான் என்று அம்மா நினைச்சா. ஆனா பழைய புத்தி அவனை விட்டுப் போகவே இல்லே.''

தேவகி தீர்மானித்து விட்டாள்.

இந்தப் பாலைவன நரக வாழ்க்கையிலும் துளசிக்குச் சொர்க்கத்தின் நிழல் கொஞ்சம் தெரிந்ததென்றால்அது தேவகி அவள்மகிழ்ச்சியாய் இருக்கிறாள் என்று நினைத்துக் கொண்டிருப்பதுதான். அந்த நம்பிக்கையையும் இவள் நேரில் போய்ப் பார்த்து நாசம் செய்துவிடக் கூடாது.

'வேண்டாம் துளசி... நான் உன்னைப் பார்க்க வரவேண்டாம். என் ஆசைக்காக உன் மனத்திலிருக்கும் அந்த ஒரே மகிழ்ச்சியையும் பறித்துக் கொண்டு விட நான் தயாராக இல்லே.'

''என் தோழி நீங்க குறிப்பிடற துளசி இல்லே! அவ ஆண்டாள் தெருவிலே இருக்கா.''

இருச்சி—

அதோ ஸ்ரீரங்கம் ஒன்றாம் நம்பர் பஸ். ஏம்மா நீயும் இதில்தானே வரப்போறே?''—

—அந்த அம்மாள் கேட்டபோது—

''இல்லே. இங்கே கொஞ்சம் சாமான்கள் வாங்கணும். நான்அடுத்தபஸ்ஸில் வரேன்.'' தேவகி நழுவிக் கொண்டாள்.

# சேமிக்க, ஸ்டேட் பாங்க்கை நாடுங்கள் தேடி வரும் செழிப்பான எதிர்காலம்

கேஷ் சர்ட்டிபிகேட்
(ரொக்கச் சான்றிதழ்)

ரெக்கரிங் டெபாசிட்
(தொடர் வைப்பு நிதித் திட்டம்)

அன்யூட்டி டெபாசிட் சர்ட்டிபிகேட்
(அன்யூட்டி டெபாசிட் சான்றிதழ்)

டேர்ம் டெபாசிட்
(தவணை டெபாசிட்)

பெரென்னியல் பென்ஷன் பிளான்
(நிரந்தர ஓய்வூதியத் திட்டம்)

ரீஇன்வெஸ்ட்மென்ட் பிளான்
(மறு முதலீட்டுத் திட்டம்)

உங்கள் ''பணத்திட்டத்தைப்'' பற்றி இதர அநேக வழிகளை அறிய, ஆறுயிரத்துக்கும் மேற்பட்ட எங்கள் கிளைகளின் அருகாமையிலுள்ள கிளைக்கு விஜயம் செய்யுங்கள்.





**ஸ்டேட் பாங்க்**

பாதுகாப்பு ஒரு நிம்மதியான மன நிலை.

CHAITRA-SBI-881 TAM



"என் தந்தை ஒரு சங்கீத வித்வான். அடிக்கடி சென்னையிலிருந்து கும்பகோணம் சென்று சில மாணவர்களுக்கு வாய்ப்பாட்டும் வீணையும் சொல்லித் தருவார். இந்த முறை கும்பகோணத்திலிருந்து வந்தபோது வீணையைக் கொண்டுவந்ததற்காக, ரயில்வேக்காரர்கள் பணம் வசூலித்த ரசீதைக் காட்டினார். இப்போதெல்லாம் வீணை, தம்புரா எல்லாவற்றிற்கும் லக்கேஜ் போடுகிறார்களாம் ரயில்வே நிர்வாகத்தினர். இது தேவையா?

கை. ராமமதி

# மஞ்சள் நிலா

புதிய டைரக்டர்கள் காதலுக்குப் புதிய கோணத்தைத் தேடிப் போவது வழக்கம். ஆனால் டைரக்டர் ரஞ்சித் புதிய இடத்தைத் தேடிப் போயுள்ளார்.



இடம்: நடிப்புப் பயிற்சிக் கல்லூரி.

மாணவன் மாணவியைக் காதலிக்கிறான். மற்ற மாணவர்களும் மாணவிகளும் அவனுக்கு டானிக் தருகிறார்கள். உற்சாக டானிக்.

நடிப்பும் படிப்பும் சொல்லித் தரவேண்டிய ஆசிரியரே வில்லனாகிறார். ஊரில் இருந்து வந்த நாயகியின் அம்மா பட்டாக மாதிரி வெடிக்கிறார் — அதுவும் பிரின்சிபால் முன்னிலையிலேயே!

காதலுக்கு பிரேக் விழுகிறது.

அப்புறம் வருகிறது அந்த அருமையான கட்டம். (பாராட்ட இந்த ஒரு இடமாவது கிடைத்ததே!)

காதலி காதலனுடன் 'டூ' விட்ட காரணத்தை வகுப்பில் நடித்துக் காட்டும்போதே வசனமாக ஒப்புவித்துப் புரிய வைக்கிறாளே அந்த இடம்.

மகிழ்ச்சியாக இருக்க வேண்டிய சமயத்தில் எல்லாம் நாயகி கண் கலங்குவதாகச் சொல்லி குளோசப்பில் ஒரு கண்ணையும் காட்டி மிரட்டி யிருக்கிறார். 'சஸ்பென்ஸ்' உடையும்போது 'சப்'பென்று போகிறது.

அத்தனை நடிகர், நடிகைகளும் இளசுகள்! புதுசுகள்! (மேஜர் ஒருவரைத் தவிர) சுரேஷ், ரவி, தியாகு, ரஞ்சனி, ஜெய விஜயா, மேகலா... ஒருவர்கூட மனத்தில் நிற்காதது டைரக்டரின் குற்றமே!

க்ளைமாக்ஸ் காட்சியை வலுப்படுத்தாமல் ஒருவரை யொருவர் குத்திக் கொலை செய்வதாகக் காட்டியிருப்பது பலவீனமான முடிவு. (மூன்று கொலைகள்)

ஒளிப்பதிவு பல இடங்களில் பல்லை இளிக்கிறது. கதையிலும் வலு இல்லை.

ரஞ்சித் அவசரப்பட்டுப் படத் துறைக்கு வந்து விட்டாரோ?

-திரைஞானி



அண்மையில் திருச்சியில் நடை பெற்ற தி. க. மாநாட்டிற்கு வந் திருந்த பல தொண்டர்கள் ஸ்ரீரங் கம் ஆலயத்துக்கும் வந்து சுவாமி தரிசனம் செய்து விட்டுச் சென் றார்கள்!

நேரில் பார்த்தவர்:
-திசைமுத்து

சென்ற வாரம் - கடலலைகள், சர்ச், கோயில் வாச லில் தூங்கும் பூசாரி, எங்கும் ஒஸோன் மணம், தவிட் டுத்தலைக் கடற்புறாக்களின் 'மியா' சப்தம், தென்னந் தோப்பு, சுமார் மூப்பது நாற்பது வீடுகள். இதுதான் மணற்காடு. பக்கத்து டைட்டேனியம் தொழிற்சாலை யின் பாதிப்பு இன்னும் ஏற்படாத தூக்கக்கலக்க கிராமம். கனகசபை மத்தியானம் வருகிறான். 'கையில் மிடில் ஈஸ்ட் தெரியும் பெட்டி; மனைவி கிரிஜாவுக்காக மாய்ந்து மாய்ந்து சம்பாதித்துச் சேர்த்துக்கொண்டு ஆவலுடன் வருகிறான். வீடு பூட்டியிருக்கிறது. எங்கே போனாள் என்று பக்கத்து வீட்டு உண்ணியைக் கேட் டால் அவன் சேச்சியிடம் "கிரிஜம்மா எவ்ட போயி?" நாகர்கோயில் போயிருப்பாள் என்று தோன்றுகிறது கனகசபைக்கு. கோபம். வீட்டைத் திறந்து பார்த்தால் ரத்தினசாமியிடமிருந்து ஒரு கடிதம் கிடக்கிறது: "விடிவதற்குள் வா."

## 2

கனகசபையை நோக்கி ஓடிவந்த உண்ணி மூச்சிரைத்தான்.

"என்ன உண்ணி?"

"சதாசிவம் சொல்றது நாட்டுக்குத்தான் போயிருக்கணுமாம்."

"நாகர்கோயிலுக்கா?"

"ஓ"

"நான் வர்றதைப் பத்தி உன்கிட்டயோ உங்க அக்காகிட்டயோ ஏதாவது சொல் லிச்சா?"

# விடிவதற்குள் வா!

"ஏய்!"

"என்னடாது பேஜாராப் போச்சு! புரு சன் திரும்பி வர சமயம் ஒருத்தி வீட்டில இருக்க வேண்டாமா? சே என்ன போம் பண்ணங்கப்பா... இப்ப ராத்திரி எங்க சாப் பிடறது?"

"அதுக்கென்ன எங்க வீட்டில ஊணு கழிக் கலாம். சேச்சி கிட்டச் சொல்லிட்டேன்" என் றான் உண்ணி. இவனுக் காகச் சலுகையாகத் தமிழ் பேச முயற்சி செய்கிறான். உண் ணிக்கு அவன் கொண்டு வந்தி ருக்கும் பெட்டி யின் மேல் கண். எப்படி யாவது துபாய்



கணவன்: என்ன லக்ஷ்மி, கீரையைச் சரியாக் கழுவலையா? பாரதி ராஜா படம் மாதிரி இருக்கே?

மனைவி: என்ன சொல்றீங்க?

கணவன்: ஒரே மண் வாசனை அடிக்குதே!

போக வேண்டும். அது அவன் சாஸ்வதக் கனவு. துபாய் போய் நிறையச் சம்பாதித்து விட்டு ஊரில் மதிப்பாகக் கையில் ஸிக்கோ கடிகாரம் பளிச்சிட, மோதிரங்களில் தங்க வைரம் டாலடிக்கத் திரும்பி வரவேண்டும். கல்யாணம் கழிக்கத் திரும்பி வரவேண்டும். உண்ணிக்குத் தெரிந்தவர்கள் அத்தனைபேரும் துபாய் போய்விட்டார்கள். அவனுக்கு மணற் காட்டில் சிநேகிதர்களே இல்லை. எல்லாரும் நீள நீளமாக, நீல நீலமாக, தபால் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். பாரினிலிருந்தும், துபாயிலிருந்தும் சவுதியிலிருந்தும் உண்ணிக்கு பாஸ் போர்ட்டு விசா எல்லாவற்றுக்கும் கிருஷ்ணன் குட்டி என்கிறவன் ஏற்பாடு செய்வதாகச் சொல்லியிருக்கிறான். இரண்டாயிரம் ரூபாய் கேட்டிருக்கிறான். எங்கே போவது? உண்ணி இப்போது தான்முப்பது ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறான்.

கனகசபை பெட்டியை எடுத்துத் தன் வீட்டுக்குள் வைத்துவிட்டு வீட்டைப் பூட்டி விட்டுச் சதாசிவத்தைப்பார்க்க நடந்தான். உண்ணிக்கு ஏமாற்றம். பெட்டியைத் திறக்க வில்லையே என்று கூடவே வந்தான். வீட்டுக்கு உள்ளே போய் மலையாளத்தில் சொல்லிவிட்டு இவனுடன் சேர்ந்துகொண்டான். சர்ச்சு பாதிரியார் சாயங்கால நடைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். போஸ்ட் ஆபீஸில் விசாரித்து விட்டுக் குடையைப் பிடித்துக் கொண்டு புறப்பட்டவர், ''கனகசபை எப்ப வந்தீங்க'' என்றார்.

''அய்யா இப்பத்தான் வாறேன்.''

''எல்லாம் சுகம் தானே?'' என்று கையை அமர்த்திக் கேட்டார்.

சுஜாதா



பெரியவர்: தம்பி நீ பி ஏ படிச்சுட்டு அப்பாவுக்கு உதவியா இருக்கியா! பேஷ், பேஷ்... அப்பா என்ன பண்ணுகிறார்?
வாலிபன்: வீட்டில் சும்மாதான் இருக்கிறார்.

-பட்டுக்கோட்டை ரவி.

---

''சுகந்தாங்க அய்யா. கிரிஜாவைப் பாத்தீங்களா?''

''கிரிஜாங்கிறது உன் மனைவி?''

''ஆமாங்க.''

''இல்லையே. கொஞ்ச நாட்களாகவே பார்க்கலையே. ஒரு முறை கோவில் வாசலில் வெச்சுப் பார்த்தேன். பதினைஞ்சு நாட்களாகியிருக்கும். நீ வர்றதைப் பத்தி ஒன்னும் சொல்லலியே.''

''பார்க்கலாங்க. ஒருவேளை நாகர்கோயிலுக்குப் போயிருக்குமோ என்னவோ சர்ச்சுக் காரியங்கள் நல்லா நடக்குதுங்களா?''

''நடக்குதுப்பா கர்த்தர் அருளாலே. சனங்க பிரார்த்தனைக்குத்தான் வரத் தயங்குறாங்க. என்னவோ பயம். சொல்ல மாட்டேங்கறாங்க. போகப் போகச் சரியாயிரும். கொஞ்ச நாளைக்கு இருப்பியா?''

''இருப்பாங்க. ரம்ஸான் முடியறவரை.''

''உனக்கு ஏதுப்பா ரம்ஸான்?''

''எனக்கு இல்லேங்க. அவங்களுக்கு! சதாசிவத்தைப் பார்த்தீங்களா?''

''கடையாண்ட நிக்கறாரு.''

பாதிரியார் கருத்த தாடியும், கட்டான உடற்கட்டுமாகக் கண்களில் ஒளியுடன், நடையில் தன்னம்பிக்கையுடன் கடற்கரையோரக் குடிசைகளை நோக்கிச் சென்றார். உண்ணி அவர் போகிற திக்கையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு ''இயான் சிநேகம் நிங்களுக்கு வேண்டாம்'' என்றான்.

''ஏன் உண்ணி?''

''இயான் சரியில்லே.''

கோவில் பூசாரி இப்போது விழித்திருந்தான். அம்மனுக்கு விளக்கேற்ற எண்ணெய் வாங்கக் கோவிலைப் பூட்டிக் கொண்டு கிளம்பிக் கொண்டிருந்தவன். ''அட எப்ப வந்தீங்க?'' என்றான்.

''பூசாரி! ரத்தினசாமி ஊருக்கு வந்திருந்தானா?''

''ஆமா. நான் பத்து நாள் முந்திப் பார்த்தேன். இன்னிக்குக்கூட வர்றதாத்தான் சொன்னாரு. திருவனந்தபுரத்தில் சோலி விட்டுப் போனாரு. நீங்க எப்ப வந்தீங்க. நான் பார்க்கவே இல்லையே''

''நீங்க நல்ல உறக்கமாணம்!'' என்று பூசாரியின் கர்சத்தை அவிழ்க்க முயற்சி செய்தான் உண்ணி.

''டேய்! செவுட்டில விட்டேன்னுபாரு... இவனை எல்லாம் எதுக்குக் கூடச் சேர்த்துக்கறீங்க ரொம்ப காசு திருடுவான்.''

''பூசாரியோட கள்ளத்தனத்தைவிடவா!''

சதாசிவம் கடையில் மூன்று பேருடன் பேசிக் கொண்டிருந்தார். எல்லோரும் புது முகங்களாக இருந்தனர். ''சதாசிவம் சௌக்கியமா?''

''கனகசபை வந்தீங்களா. மலையாளத்துக்காரப் பையன் சொன்னான். பாதி புரியலே. உன் மனைவியைப் பத்திக் கேட்டியாமே, எனக்குத் தெரியாதே.''

''தெரியாதா? நாகர்கோவிலுக்குப் போயிருக்கிறதா நீங்க சொன்னதா உண்ணி சொன்னான்!''

''போயிருக்கலாம்னு சொன்னேன். இவனுக்குத் தமிழும் புரியாது ஒரு இழவும் புரியாது.''

''ரத்தினசாமியைப் பார்த்தீங்களா?''

''ரத்தினசாமி வருவான்னு நினைக்கிறேன். ஏன்?''

''ரத்தினசாமி வந்திருந்தானா இடையிலே?''

''அப்பப்ப பஸ்ஸிலே பார்த்ததா ஞாபகம். அவனுக்கு உன் மனைவி எங்க போயிருப்பான்னு தெரிஞ்சிருக்கும். ஜலைக்கிட்ட ஏதோ சொல்லிக்கிட்டு இருந்ததா ஞாபகம். எதுக்கும் ஒரு நடை நாகர்கோவில் போய்ப்பார்த்துட்டு வந்துறேன்? பத்து நிமிட்டுக்கு ஒரு பஸ் போவுது.''

''வேண்டாங்க. அவனே வரட்டும்.''

''துபாய்ல தங்கம் என்ன விலைங்க?'' என்றான் டீக்கடைக்காரன்.

''நான் துபாய்ல இல்லே. சவூதிலே.''

''அங்கதான்! தங்கம் எத்தினிங்க?''

''எல்லாம் இந்த ஊர்விலைதாங்க. எதுவும் குறைவில்லே. ரத்தினசாமி வந்தா உடனே என்னை வந்து பார்க்கச் சொல்லுங்க.''

''ராத்திரி சாப்பாட்டுக்குஎன்ன செய்வே? நம்மவூட்டுக்கு வந்திரேன்.''

''இல்லேங்க. பக்கத்திலே உண்ணி வீட்டிலே சாப்பிட்டுக்கிறேன்.''

''புழுங்கரிசி வவுத்தைப் புடுங்கும். சாக்கிரதையா இரு.''

**கொ**ஞ்ச நேரம் நடந்து மெயின் ரோடு வரை வந்து விட்டான். யோசித்தான். நாகர்கோயில் போய்விடலாமா? ராத்திரி அங்கே போய்ப் படுத்துவிடலாம். அவன் ஆணவம் தடுத்தது. போன மாதக் கடுதாசிலேயே எழுதிவிட்டேன், ரம்ஸான்போது வருகிறேன் என்று. வேணுமென்றேதான் நாகர்கோயில் போயிருக்கிறாள். போகட்டும். ரத்தினசாமியுடன் என்ன சகவாசம்! அவன் ஏன் கடிதம் எழுத வேண்டும்? ''விடிவதற்குள் வா!'' அதில் பொதிந்திருந்த அர்த்தங்கள் அவனுக்குப் பிடிக்கவில்லை.

''உண்ணி! நான் இல்லாதபோது ரத்தினசாமி அடிக்கடி வீட்டுக்கு வருமா?''



''எங்க கான்வெண்ட்டில ஐந்து எலிகள் சேர்ந்து பூனைக்கு மணி கட்டுகிற கதையை நாடகமாகப் போடப் போறோம்.''
''நாடகத்துக்குப் பெயர்''?
''பாஞ்ச் எலி சபதம்!''
-என். எஸ். வி. குருமூர்த்தி

''ரத்தினசாமி! அதாராணு?''

''கொஞ்சம் உயரமா, கருட்டை கருட்டையா தலை முடி வெச்சுக்கிட்டு.''

''ஓ அயாளோ! வரும் வரும். கிரிஜம்மா இல்லாத்த சமயம்.''

சிகரெட் பற்ற வைத்தான். உண்ணி சிகரெட் லேட்டரில் பொறித்திருந்த அராபிய எழுத்துக்களை வியந்து, ''இது எந்தா?'' என்றான். திரும்ப வீட்டுக்கு வந்தபோது உண்ணி கனகசபையைத் தன் வீட்டுக்கு அழைத்தான். உள்ளே குனிந்து சென்றான். தேவகி ஒரு வருஷத்தில் நிறைய மாறிப் போயிருந்தாள். இவனைக் கண்டதும் எழுந்து நின்றாள். ''உண்ணி! தேவகியைக்கேளு கிரிஜா ஏதாவது சொல்லிவிட்டுப் போனாளான்னு!''

''இல்லே'' என்று தூணைப் பிடித்துக் கொண்டு தலையசைத்தாள். ரப்பர் வளையல் ஒன்றே ஒன்று அணிந்திருந்தாள். முண்டு தொப்புளை மறைத்து இறுக்கிக் கட்டியிருந்தது. பூப்போட்ட ரவிக்கை அவளுடைய கச்சிதமான மார்பை அழுத்திக் கொண்டிருந்தது. முழங்கை வழுவழுப்பாக, கூந்தல் ஏராள ராத்திரி போல் இருந்தது. கனகசபைக்கு ஒரு கணம் அவள் மேல் அதிக ஆசை உண்டாயிற்று. தன் மனைவி தனக்குத் துரோகம் பண்ணியிருக்க வேண்டும் என்று விரும்பினான். உண்ணி ஒரு தகரப் பெட்டியிலிருந்து அழுக்காகக் காகிதங்கள் இரண்டு மூன்று கொண்டு வந்தான். 'மிடில் ஈஸ்ட் எம்ப்ளாய்மெண்ட் ஏஜென்ஸி' என்கிற நிறுவனத்திலிருந்து தப்புத் தப்பாக டைப் அடித்த கடிதத்தைக் காட்டினான்.

''பாஸ்போர்ட் எடுக்றதில ஏதும் கஷ்டமில்லே. ஈ ஓர்க் பர்மிட்டும்... விசையும்...''

''உண்ணி உனக்கு அங்க வரணுமா?''

''அதே அதே'' என்று கண்கள் ஆவலுடன் விரியச் சொன்னான்.

''இவங்களுக்கு ஏதாவது பணம் கொடுத்திருக்கியா?''

''ஏய்! இல்யா!''

''கொடுக்காதே. எல்லாம் ஏமாத்துக்காரங்க. எல்லாம் கள்ளம்! இத பாரு அங்க வந்து நீ என்ன வேலை செய்வே?''

''ஓட்டலிலாணம்.''

''இப்ப அதெல்லாம் ரொம்பக் கஷ்டம்.''

''இல்யா. நூறுணு போன மாசம் போயிருக்கு.''

''எல்லாம் கள்ளத் தோணி கேஸா இருக்கும். அங்க ரொம்ப கஷ்டம் இப்பல்லாம். பேசாம இங்கேயே இருந்து உங்க அக்காவைக் கவனிச்சுக்க. தோட்டத்தில காசு வரதில்லே?''

உண்ணி ஏமாற்றத்துடன் 'ப்ச்' என்றான். 'நான் போவணும்' என்றான்.

தேவகி ''வளர இஷ்டமாணு துபாயி!'' என்றாள்.

அவள் குரல் இனிமையாக இருந்தது. சின்ன தம்ளரில் டீ கொண்டுவந்து கொடுத்தாள். அதை வாங்கும்போது அவளைப்பார்க்க முடிந்தது. மறுபடி கம்பத்தைக் கட்டிக் கொண்டு நின்றாள். கீழே பார்த்துக்கொண்டிருந்தாள். கனகசபை தன் பெட்டியைக் கொண்டு வந்து திறந்து உண்ணிக்கு வாங்கி வந்திருந்த காஸெட் டேப் ரிக்கார்டரை எடுத்துக் கொடுத்தான். பிளாஸ்டிக் உறை கூட உரிக்கப்படாமல் புத்தம் புதிதாக இருந்தது. உண்ணி பூரித்துப் போய் அதை முகர்ந்து பார்த்துத் திருப்பிப் பார்த்து,

''இது எத்தரை?'' என்றான்.

''எத்தரையா இருந்தா என்ன? உனக்கு வாங்கிட்டு வந்திருக்கேன். எடுத்துக்க.''

திடீர் என்று யோசனை தோன்றியது. கிரிஜாவுக்காக வாங்கி வந்திருந்த பல ஸாரிகளில் ஒன்றை எடுத்து, ''தேவகி! இது உனக்கு'' என்றான்.

தேவகி பேசாமல் அவனைப் பார்த்தாள். கண்களில் ஒருவிதமான மருட்சி தெரிந்தது.

''எனக்கோ'' என்றாள்.

''ஆமாம். உனக்குத்தான். எடுத்துக்க.''

அதை நெற்றியைச் சுருக்கிக் கொண்டு பார்த்துவிட்டு, தன்மேல் வைத்துப் பார்த்தாள். ''வேண்டா'' என்றாள்.

''பரவாயில்லே தேவகி எடுத்துக்க.''

தேவகி உண்ணியிடம் படபடவென்று மலையாளத்தில் ஏதோ சொன்னாள். புரியவில்லை.

''என்ன சொல்றது?''

''அது ஸாரி கட்டறதில்லேயாம். அச்சன் வந்தால் கோவிக்கும்.''

''உங்க அச்சன்கிட்ட நான் சொல்லிக்கிறேன்.'' அப்போது 'இங்க இருக்கியா' என்று வாசலில் சதாசிவம் குரல் கேட்டது. கனகசபை வெளியே வந்தான். சதாசிவத்துடன் ரத்தினசாமியும் வந்திருந்தான்.

''கிரிஜாவைச் சமீபத்தில பார்க்கவே இல்லேங்கறான் ரத்தினசாமி.''

''அப்ப இந்தக் கடுதாசிஎழுதினது யாரு?''

ரத்தினசாமி அதை வாங்கிப் பார்த்தான். இருபத்தைந்து வயதிருக்கலாம். அடிக்க வருகிற மாதிரி சட்டையும், பெரிதாகக் கரை வைத்த சலவை வேட்டியும் கட்டியிருந்தான். மீசைக்கு மெழுகு போட்டிருந்தான். அதைத் திருகிக்கொண்டே கடிதத்தைப் பார்த்து, ''சே, இது நான் எழுதினதில்லே'' என்றான்.

(தொடரும்)

# பூவின்
# நறுமணத்தில்
# குளித்து மகிழ




# மைசூர்
# ஜாஸ்மின்

MCA/J/51/TAM

கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள் : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.



## யார் புத்திசாலி?

இந்த நெஞ்சக்
கோட்டையில்
காதலைப் பதுக்கி
வைக்கும் என்னைவிட
அந்தப் பஞ்சு மூட்டையில்
நெருப்பினைப் பதுக்கி
வைக்கும்
வைத்தியக்காரன்
புத்திசாலி.

வன்மீக. வெங்கடாசலம்

# மருத்துவ அற்புதம்

மருத்துவக் கல்லூரி, இன்ஜினீரிங் கல்லூரி என்று தனித் தனியே இருந்தது போக இனி மருத்துவ இன்ஜினீயரிங் கல்லூரி என்று கூடத் தோன்றலாம்! பயோ மெடிகல் இன்ஜினியரிங் அவ்வளவு முக்கியத்துவம் பெற்று விட்டது.

நோயினாலோ விபத்தினாலோ பாழான சரீர உறுப்புக்களுக்குப் பதில் செயற்கை உறுப்பு பொருத்துவது புதிய கருத்து அல்ல. ஆனால் இன்று விண்வெளி விஞ்ஞானம், பாலிமர் கெமிஸ்ட்ரி, எலக்ட்ரானிக்ஸ் போன்ற பல துறைகளில் மனித இனம் அடைந்துள்ள மகத்தான முன்னேற்றம் டாக்டர்களுக்கு வியக்கத்தக்க ஒரு மாற்று உறுப்புப் பட்டியலையே தருகின்றன.

தோல், ரத்தம், எலும்பு, மைக்ரோ எலக்ட்ரானிக்ஸ் முறையில் இயங்கும் கை-கால்கள், கண்ணுக்கு லென்ஸ், பான்கிரியாஸுக்குப் பதில் இன்ஸுலின் பம்ப், சிறுநீரகம், ரத்த நாளம் போன்ற எல்லாம் செயற்கை, செயற்கை!

1996ம் ஆண்டில் ஒலிம்பிக் ஓட்டப் பந்தய வீரன் ஒருவன் செயற்கை இருதயம் பொருத்தப்பட்டு அது சூப்பர்மேன் சக்தியை அவனுக்குத் தருவதால் போட்டியில் சேரக் கூடாது என்று தடுக்கப்படலாம்.

நமது இருதயம் ஒரு பம்ப். ஒரு நாளைக்கு லட்சம் தடவை அடித்துக்கொள்ளும் பம்ப்! 60,000 மைல் நீளமுள்ள ரத்த நாளங்களுக்கு ரத்தம் பாய்ச்சும் பம்ப். எழுபது ஆண்டுகள் ஓய்வின்றி உழைப்பது. இருபது ஆண்டுகளாக மனிதன் எத்தனையோ முயற்சி செய்தும் ஒரு செயற்கை இருதயம் உருவாக்க முடியவில்லை.

ஆனால் அவன் சோர்ந்துபோய் விடவும் இல்லை. உடா பல்கலைக் கழகம் தயாரித்து வரும் ஜார்விக் இருதயம் முழுக்க முழுக்கச் செயற்கையானது. அது 1987ல் வெற்றிகரமாகப் பயன்படுத்தப்படலாம் என்று விஞ்ஞான உலகு நம்புகிறது.

ஆனால் இன்றைக்கே லட்சக் கணக்கான இருதய நோயாளிகள் நுண்ணியதான எலக்ட்ரானிக் பேஸ் மேக்கர்களைத் தங்களின் உடலின் உள்ளே பொருத்திக் கொண்டிருக்கிறார்கள். இவை மின் அலைகளை அனுப்பி இருதயத் துடிப்பைச் சீராக வைத்திருக்கின்றன.

பாலியீஸ்டர் நூல்களினால் உருவான ரத்த நாளங்கள் நோயாளியின் அடைபட்ட ரத்த நாளங்களுக்குப் பதிலாக ஸர்ஜன்களால் உடலுக்குள் பொருத்தப்படுகின்றன.

இடுப்பு மூட்டு நழுவிவிடுவதால் நகரமுடியாமல் தவிக்க வேண்டாம். ஆண்டொன்றுக்கு 65000 அமெரிக்கர்கள் செயற்கைப் பந்துக் கிண்ண மூட்டு இடுப்பில் பொருத்தப்பட, சர்வ சாதாரணமான வாழ்க்கை நடத்துகிறார்கள்.

ஆடோஸ்கிளீரோஸிஸ் என்று ஒரு நோய். காதின் மையத்தில் உள்ள நுண்ணிய அங்கவடி எலும்பு தடிப்பதால் சரியாகக் காது கேட்காமல் போகும். இந்த எலும்பை நீக்கி விட்டுப் பதிலுக்குச் செயற்கை எலும்பு பொருத்துகிறார்கள்.

''பாஸ்டன் எல்போ'', ''உடா ஆர்ம்'' என்ற செயற்கைக் கரங்கள் முடவர்களுக்குப் புது வாழ்வு தருகின்றன. இவை இயங்க உள்ளுக்குள் சிறிய மோட்டார் உள்ளது. அந்த மோட்டார் இயங்கப் பாட்டரியும் இருக்கிறது. பாட்டரிக்கு அவ்வப்போது சார்ஜ் ஏற்றிக் கொள்ளலாம். இந்தக் கரத்தை வைத்துக் கொண்டு வயலினோ, வீணையோ வாசிக்க முடியாமல் போகலாம். ஆனால் முடவன் தன் கரத்தைத்

# விஞ்ஞானப் பக்கங்கள்:

தானே பயன்படுத்திச் சராசரி வாழ்க்கை நடத்த முடியும்.

கம்ப்யூட்டர் நிர்வகிக்கின்ற ஒரு செயற்கை முழங்காலையும், காலையும் கண்டு பிடித்துள்ளார்கள். மைக்ரோ பிராஸஸருடன் கூடிய இதனை அபிவிருத்தி செய்ய முயற்சிகள் நடக்கின்றன.

இவையெல்லாம் பாழான அல்லது இழந்து விட்ட உறுப்புக்களுக்குப் பதில் உடலில் பொருத்தப்படுகின்றவை. பழுதுற்ற உடல் உறுப்பு தானேசீர்ப்படவும் உதவும்செயற்கை அம்சங்களும் உண்டு. உதாரணமாகத் தீப் புண்களுடன் அவதிப்படுகிறவர்களுக்குச் செயற்கைத் தோல் இருக்கிறது. இந்த ஸிலிகான் தோல் தீப்புண் பெற்ற தோலை முதலில் பாதுகாக்கிறது. பிறகு தன்னைத் தானே தோல் சீராக்கிக் கொள்ளச் செயற்கைத் தோல் உதவுகிறது.

ஜப்பானில் கிரீன் கிராஸ் கார்ப்பரேஷன் செயற்கை ரத்தம் பெருமளவில் தயாரிக்க

''எனக்குத் தூக்க மாத்திரை தரியே! எதுக்கு பாமா?''

''எனக்கு வேறு நல்ல இடத்தில் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. நிம்மதி வேண்டாம்?''

சுதர்ஸன்.



உத்தேசித்துள்ளது. பால் போன்ற வெண்மை நிறமுடைய இதற்கு ரத்தத்தின் தன்மைகள் அனைத்தும் கிடையாது. ஆனால் உடல் திசுக்களுக்குப் பிராண வாயு எடுத்துச் செல்லவும் கரியமில வாயுவைக் கிரகித்துக் கொள்ளவும் இதனால் முடியும். ரத்த பாங்குகள் குறைவாக உள்ள இடங்களில் இது பெருதவியாக இருக்கும். இதனைப் பயன்படுத்தி நோயாளியைக் காப்பாற்றிவிட்டால் பிறகு அவன் உடல் தேறத் தேற தேவையான இயற்கை ரத்தத்தைத் தானே உற்பத்தி செய்துகொள்வான்.

இன்ஸுலின் பம்பை உடலுக்குள் பொருத்தி விட்டால் டயபெடிஸ்காரர்கள் ஊசி போட்டுக் கொள்ளவோ மாத்திரை விழுங்கவோ அவசியமில்லை. பான்கிரியாஸின் பணியைச் செவ்வனே செய்து ரத்தத்தில் சர்க்கரைச் சத்தின் அளவை நிர்வகிக்கிறது.

எதிர்காலத்தில் செயற்கை நுரையீரலைக் கூட உடலுக்குள் பொருத்தலாம் என்று விஞ்ஞானிகள் நம்புகின்றனர்!

**- நன்றி: நியூஸ் வீக்**



# சிரிப்பு!


''நேத்து ராத்திரியிலே தான் மழையிலே நனைஞ்சு வந்தீங்களே.. இந்தத் தண்ணிக் கஷ்டத்திலே மறுபடியும் காலம்பற குளிக்கணுமா?''


ஸ்வர்க்கா எஸ்டேட்ஸ்


''க்ரௌண்ட் ஃப்ளோர் ரெண்டரை லட்சம்! மேலே போகப் போக ஆயிரம் ஆயிரமாக் குறையும்!''
''அப்படீன்னா நான் ஒரேயடியா 'மேலே' போயிடறேன்!''


இரண்டுக்கு மேல் வேண்டாம்!
''பல்லவன் சார்! நீங்க குழந்தைகளுக்குப் பெயர்வைக்கக் கவலையே பட வேணாம்! சேரன், சோழன், பாண்டியன்-னு பெயர் வைச்சுடுங்க!''


சாராயக் கடை
''இன்னாப்பாரு, பே
னுக்கு 'தண்ணி'யிலே
சொன்னாங்க!''


''ஃபுட் போர்ட்லே தொங்கறவங்க இறங்குங்க! பாதி பேர் மறு பக்கம் போய்த் தொங்குங்க! அப்பத்தான் வண்டி பாலன்ஸ் ஆகும்!''

அடுத்த வாரம் — இலவச இணைப்பு

குடும்பத்தில் ஒவ்வொருவரும் படித்துப் பயனடையக் கூடிய தொகுப்பு —

# கௌரி கல்யாணமே, வைபோகமே!

திருமண மந்திரங்கள்
சம்பிரதாயங்கள்
பற்றிய விளக்கங்களும்
சட்டபூர்வமான
விளக்கங்களும்

இங்கே மடிக்கவும்

# போட்டிகளில் வெல்லுங்கள்!

— டி. ஆர். ரமேஷ் —

கல்கி 8-8-82 இதழுடன்
இலவச இணைப்பு

முன்னுக்கு வரத்துடிக்கும்
ஒவ்வொரு இளைஞரும் படித்து
பயனடைந்து பாதுகாக்க
வேண்டிய தொகுப்பு



ஒரு புத்தகத்தின் மூலமாக அல்லது ஒரு கட்டுரையின் மூலமாக ஒருவருடைய குண இயல்புகளை மாற்றியமைத்து விட முடியுமா? அல்லது அவருடைய வாழ்க்கையையேதான் திசைதிருப்பிவிட முடியுமா? என்று சந்தேகம் எழலாம். நாம் படிக்கப் படிக்க வளருகிறோம்; கேட்கக் கேட்க மாறிக் கொண்டே வருகிறோம். இது நமக்கே தெரியாமல் நமக்குள் இயங்கி வரும் இயற்கையின் நியதி. இந்தப் புத்தகம் இந்த விதமாக நிச்சயம் பலன் தரும்.

இன்றைக்கு லட்சோப லட்சம் இளைஞர்களின் தவிர்க்க முடியாத கடமைகளில் ஒன்றாகி விட்டது இன்டர்வியூ. கல்வியும், கல்வியைத் தொடர்ந்து வேலையும் என்றான பின் இடையில் பெரும் மதில் சுவராக நிற்பது இந்த இன்டர்வியூதான். இந்தப் பெரும் மதில் சுவரை எப்படிக் கடப்பது?

## 'இன்டர்வியூ'வைச் சந்திப்பது எப்படி?

ஒரு கம்பெனியிலிருந்து உங்களுக்கு 'இன்டர்வியூ'வுக்கு அழைப்பு வருகிறது. சாதாரணமாக உடனே எல்லோரும் ஒரு 'பொது அறிவு' புத்தகத்தை வாங்கிக் கொள்கிறார்கள். அதிலிருக்கும் பல விஷயங்களை நெட்டுருப் போடுகிறார்கள். இவற்றில் பாதி 'இன்டர்வியூ'வுக்குக் கிளம்பும் பதட்டத்திலேயே மறந்துவிடும்.






(2) என்னுடைய குறைகள் என்ன என்று தெரிந்து அதை நீக்க முயற்சி எடுத்தேனா?

(3) மற்றவர்கள் ஒன்று சொல்கிறார்கள் என்பதற்காக என் மனம் சஞ்சலம் அடைந்து விடுமா?

(4) மற்றவர்களின் தோழமையில் சந்தோஷம் அடைகிறேனா?

(5) மற்றவர்களிடம் கேட்பதை விட, மற்றவர்களுக்கு உதவுவதில் சந்தோஷம் அடைகிறேனா?

(6) மற்றவர்களைத் தாழ்த்தி நான் அதிகாரம் செய்கிறேனா?

(7) நான் தாழ்வு மனப்பான்மை இல்லாதவனாக இருக்கிறேனா?

(8) எதிர்வரும் பிரச்னைகளைக் கண்டு பதட்டப்படாமல் தன்னம்பிக்கையுடன் அஞ்சாமல் எதிர்நோக்கச் சித்தமாயிருக்கிறேனா?

(9) மற்றவர்கள் கூட்டுறவில் நான் சந்தோஷமாக இருக்கிறேனா?

(10) கொடுத்த வாக்குறுதிகளைக் காப்பாற்றாமல் தள்ளிப் போட்டுக் கொண்டே இருக்கிறேனா?



இவர்தான் வெற்றிகரமான அந்தரங்கச் செயலாளர். டைரக்டர் சொல்வது இவருக்குப் புரியவில்லை என்கிறார் இவர். முன்னவரோ டைரக்டர் தெளிவாகச் சொல்லவில்லை என்கிறார். யாரைப் பார்த்துச் சந்தோஷப்படுவார்மேலதிகாரி?

இந்த 'வெற்றிகரமான செயலாளர்' தனக்குப் புரியவில்லை என்று சொல்வதால் தாழ்ந்துவிடப் போவதில்லை. மாறாக அவருக்குப் பல உயர்வுகள் காத்திருக்கும். 'பணியுமாம் என்றும் பெருமை' என்ற ரகசியம் புரிகிறது இல்லையா?

நீங்கள் செல்லும் இன்டர்வியூவில்கூட உங்களுக்குத் தேர்வாளர் கேட்கும் கேள்வி புரியவில்லை என்றால், ''சாரி சார், எனக்கு நீங்கள் கேட்பது புரியவில்லை. இன்னொரு தரம் சொல்ல முடியுமா?'' என்று கேட்கலாம்.

''சார், கொஞ்சம் புரியும்படியாகச் சொல்லுங்கள்''

என்றால் இங்கேதான் நீங்கள் தோல்வியடைகிறீர்கள்.

இது மனித இயல்பு. கல்வியாலோ, பொருளாதாரத்தாலோ தாழ்ந்த நிலையில் இருப்பவர்களுக்குக் கூட அவரவருக்கு என்று ஒரு ஈகோ இருக்கும். மிகச் சாதாரண மானவன் கூட,

''என்னை யார்னு நினைச்கட்டான் அந்த மடையன்? என்னோட வலு என்னன்னு காட்டறேன் பாரு அவனுக்கு'' என்று உறுமுவான். மனிதன் ஒவ்வொருவனுக்கும் ஈகோ என்பது உண்டு. அதைத் திருப்திபடுத்துங்கள். நீங்கள் ஆயிரம் கொட்டிக் கொடுத்தாலும் செய்யாத வேலையை அந்த வார்த்தைகள் செய்து முடித்துவிடும். உங்களுக்குக் கீழ் பணியாற்றும் பியூனைக்கூட நீங்கள் அலட்சியப்படுத்தி விட முடியாது.

உலக ஞானமும் ஒத்துப்போகும் தன்மையும், இனிமையான சுபாவமும், மற்றவர்கள் சொல்வது சரியாக இருக்கும் பட்சத்தில் தன்னை மாற்றிக்கொள்ளத் தயாராக இருப்பவர்களுமே வாழ்க்கையில் வெற்றி பெறுகிறார்கள்.

கீழே சில கேள்விகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் உங்களை நீங்களே பரிசோதித்துக் கொள்ளுங்கள்.

(1) என்னுடைய பலம் எதில் இருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டு அதை முழுமையாகப் பயன்படுத்துகிறேனா?



மனமும், உடலும் நடுங்க கம்பெனிக்குப் போய்ச் சேருகிறார்கள். ஆயிரக் கணக்காக வந்திருக்கும் எம்.ஏ.க்களையும் எம். பி. ஏ.க்களையும் பார்க்கும்போது நம்பிக்கை முழுவதும் போய்விடுகிறது. இவருக்கான அழைப்பு வரும்போது வியர்வையில் குளித்துக் கொண்டே தேர்வாளர்களின் முன்னிலைக்குச் செல்கிறார்.

அவரை உட்காரச் சொல்லிவிட்டுச் சில சம்பிரதாயமான கேள்விகளைக் கேட்ட பிறகு இந்தக் கேள்வியைக் கேட்கிறார்.

''நீங்கள் சினிமா பார்ப்பது உண்டா?''

''பார்ப்பதுண்டு சார்'' (முக மலர்ச்சியுடன் இவர் சொல்கிறார்.)

''மாதத்துக்கு எத்தனை பார்ப்பீர்கள்?''

''இரண்டு மூன்று.''

''சமீபத்தில் ஜனாதிபதி பரிசு வாங்கிய படம் என்ன என்று சொல்ல முடியுமா?''

இவருடைய முகம் சுருங்கிவிடும். ''தெரியாது. சார்!''

''உங்களுக்கு மிகவும் பிடித்த நடிகை யார்?''

''எனக்கு யாரையும் குறிப்பிட்டுப் பிடிக்காது. எல்லோரும் சுமாராக நடிக்கிறார்கள்...''

''இந்த வருடம் ஊர்வசி பெற்ற நடிகையை....''

''யாரென்று எனக்குத் தெரியாது சார்....'' என்று வருத்தத்துடன் உண்மையை ஒப்புக்கொள்கிறார் இவர்.

ஏனெனில் தெரியாத விஷயத்தை 'தெரியாது' என்று தைரியமாகச் சொல்லிவிட வேண்டும். பேசாமல் மட்டும் இருக்கக் கூடாது என்று யாரோ சொல்லியிருக்கிறார்கள் அவருக்கு. தேர்வாளர் 'சரி, நீங்கள் போகலாம்' என்று சொல்லி அனுப்பிவிடுகிறார். அடுத்த வாரம் 'ரிக்ரெட்' கார்டும் வந்துவிடும் இவருக்கு. அதைப் பார்த்துவிட்டு ஒரே வருத்தம் இவருக்கு.

''எனக்கு முதலிலேயே தெரியும், இந்த மாதிரி நடக்கும்னு. இவனுங்க முதலிலேயே வேண்டியவங்களை செலக்ட் பண்ணி வச்சிருக்காங்க. அப்புறமா வர்றவங்க கிட்ட சம்பந்தா சம்பந்தமில்லாம கேள்விகளைக் கேட்டு கழிச்சிக் கட்டிடறது. எங்கிட்ட அதில ஒருத்தன் என்ன கேட்டான் தெரியுமா அப்பா? 'உனக்கு எந்த நடிகை பிடிக்கும்?' ஒரு மானேஜர் போஸ்டுக்கு வந்தவனைப் பார்த்துக் கேக்கற கேள்வியா இது?''

கேட்கும் இவரது தந்தைக்கும் ஒரே வருத்தம். "ஆமாம் சங்கர். இந்த இன்டர்வியூவெல்லாம் வெறும் கண் துடைப்புத் தான்னு தெரிஞ்ச விஷயம். என்ன செய்யறது. நமக்கு யாராச்சும் எம். எல். ஏ.வையோ மந்திரியையோ தெரிஞ்சிருக்கணும். ம்... அடுத்த வாரம் வீரராகவனைப் போய்ப் பார்க்கிறேன்..."

வருத்தம், வேதனை, விரக்தி.

இனி இதே கேள்வியை ஒரு 'முன்னுக்கு வரப்போகும்' இளைஞனிடம் கேட்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம்.

"நீங்கள் சினிமா பார்ப்பதுண்டா?"

"பார்க்கிறதுண்டு சார். அநேகமாக ஆங்கிலப் படம் தான் பார்ப்பேன். சில சமயம் அருமையான இந்திப் படங்களைப் பார்ப்பதுண்டு. பெங்காலி, மலையாளப் படங்களையும் க்ளாஸ் மெட்ஸ் சில சமயம் சிபாரிசு செய்வார்கள், இது அவார்ட்பிக்சர், நீ பார்த்தால் மிகவும் ரசிப்பாய் என்று. அந்த மாதிரி சமயங்களில் அந்தப் படங்களையும் பார்ப்பேன்...."

இந்தக் கேள்விக்கும் மானேஜர் போஸ்டுக்கும் சம்பந்தம் இல்லைதான். ஆனால் இவன் சொன்ன பதில் எத்தனை விஷயங்களைத் தேர்வாளருக்குத் தெரிவித்திருக்கின்றன தெரியுமா?

(1) இந்த நபர் இன்றைய உலக நடைமுறையுடன் ஒத்துப்போகக் கூடியவர். எனக்கு இதெல்லாம் பிடிக்காது என்று மூலையில் ஒதுங்கிக்கொள்ளக் கூடியவர் அல்ல. எனவே இந்தப் பதவியில் இவரை வைத்தால் நடைமுறைச் சாத்தியமாகப் பார்ப்பார்.

(2) கற்பனைத் திறனும், கலை ரசனையும் உடையவர். சினிமா என்ற வார்த்தை அதற்குச் சம்பந்தப்பட்ட பல சம்பவங்களை இவருள் தோற்றுவிக்கிறது. பலதரப்பட்ட மொழிப் படங்களைப் பார்ப்பதால், தேடிச் சென்று சிறந்ததோடு தொடர்பு கொள்ளும் ரசனை உடையவர். எனவே இவர் எடுக்கும் முடிவுகள் அனைத்தையும் அலசிச் சிறந்ததாக இருக்கும்.

(3) நண்பர்கள் நிறைய உடையவர்; அதுவும் பலவித மான குழுக்களில். ஆங்கில ஸ்டண்டுப் படமும் பார்க்கிறார். அவார்டு பிக்சரையும் பார்க்கிறார். இரண்டு இடங்களிலும் நண்பர்கள் இருக்கிறார்கள். எனவே இவரை இந்தப் போஸ்டில் போட்டால் நட்புடன் அனைவரிடமும் பழகிக் காரியமாற்றுவார்.

அந்தத் தேர்வாளர் குழு அதோடு விடாமல் குறும்புடன் மேற்கொண்டு கேட்கிறது.





"சார், நீங்கள் சொன்னதில் இந்த விஷயம் ஒரேகுழப்பமாக இருக்கிறது. நீங்கள் சொன்ன விவரங்கள் புரியவில்லை, போதவில்லை. இன்னொரு தரம் கொஞ்சம் தயவு செய்து சொல்கிறீர்களா?"

பி. ஏ. நன்றாகத்தான் கேட்டார், டைரக்டரும் சொல்லி விடுவார். ஆனாலும் அவருக்குக்கோபம்தான் வரும். பி.ஏ.வை மட்டம் தட்டிக் கொண்டிருப்பார். இன்னொரு பி.ஏ. இதே விஷயத்தைக் கையாளும் முறையைப் பார்ப்போம்.

"சார், நீங்கள் டிக்டேட் செய்ததில் இந்தக் குறிப்பிட்ட இடம் எனக்குப் புரியவில்லை. என்னால் அதைக் கிரகித்துக் கொள்ள முடியவில்லை, உங்களுக்குச் சிரமம் இல்லையென்றால் இன்னொருதரம் சொல்ல முடியுமா?"



வனங்களில் இந்தத் தேர்வை Objective Type முறையிலேயே நடத்துகிறார்கள்.

(1) முதலில் கேள்வித் தாளை முழுவதும் படித்து விடுங்கள்.

(2) தெரிந்தவற்றுக்கெல்லாம் முதலில் மடமடவென்று பதில் எழுதிவிடுங்கள். இதை எழுதி முடித்த தெம்பிலேயே சந்தேகமாக இருப்பவற்றிற்கும் பதில் நினைவுக்கு வந்து விடும்.

(3) கட்டுரைக் கேள்விகளுக்கு நீங்கள் பக்கம் பக்கமாகப் பதில் எழுத வேண்டும் என்ற அவசியமில்லை. உங்களுக்குத் தெரிந்ததை யெல்லாம் எழுதவேண்டும் என்ற அவசியமும் இல்லை. குறிப்பிட்ட அந்தத் தலைப்பை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள், நீங்கள் சொல்ல வந்ததைச் சரியாகச் சொல்லி இருக்கிறீர்களா, சரியான வார்த்தைகளைப் பயன்படுத்தியிருக்கிறீர்களா இவற்றைத்தான் அவர்கள் பார்க்கிறார்கள்.

(4) குறித்த காலத்தில் சரியாகத் தேர்வை முடித்துக் கொள்ள வேண்டும். நேரமும், பதில்களை எழுதிய முறையுமே உங்களைச் சரியான அதிகாரியாக ஆக்கும்.

(5) தெரியாத கேள்விகளுக்கு ஒன்றுக்கொன்று குழப்பி எழுதக் கூடாது. சந்தேகமானவற்றை விட்டுவிடுவது நல்லது.

இந்த இன்டர்வியூக்களிலும் சரி, வருங்காலத்திலும் சரி, வார்த்தைகளிலும், அதை உபயோகிக்கும் முறையிலும் தான் உங்களுடைய வெற்றி அடங்கியிருக்கிறது.

## வார்த்தைகளே வாழ்க்கையின் படிகள்

'சிந்திய வார்த்தையை அள்ள முடியுமா?'

என்று பாட்டி சொல்லுவாள். அது நூற்றுக்கு நூறு உண்மை. நாம் பேசும் வார்த்தைகளே நம்மை யார் என்பதை அடையாளம் காட்டி விடுகின்றன.

பெரும் மானேஜிங் டைரக்டர் அவர். அவருடைய பி. ஏ. வுக்கு ஒரு கடிதத்தை டிக்டேட் செய்கிறார். அவற்றுள் சில விஷயங்கள் பி. ஏ.வுக்குப் புரியவில்லை. பி. ஏ. அடக்க மானவர்தான். புத்திசாலிதான். எனவே அவர் டிக்டேட் செய்ததை முழுவதும் ஷார்ட் ஹாண்டில் குறிப்பெடுத்துக் கொள்கிறார். பிறகு கடைசியில் மரியாதையாக, மெதுவாகச் சொல்கிறார்—



''இத்தனை வித சினிமா பார்க்கிறேன் என்கிறீர்கள். நண்பர்களுடன் போவீர்களா, தனியாகவா? பெண் நண்பர்களுடன்....?''



சிரித்த முகத்துடன் இளைஞன் பதிலளிக்கிறான். ''அநேகமாக என்னுடைய நண்பர்களுடன்தான் போவேன். சில படங்கள் தனிமையிலே பார்த்து ரசிக்கக் கூடியவையாக இருக்கும். அவற்றைத் தனியாகத்தான் ரசிப்பேன். ஸாரி, எனக்கு சினிமா பார்க்கும் அளவுக்குப் பெண் நண்பர்கள் இடையாது....''

இதிலும் அவன் தன்னுடைய தேர்ந்தெடுத்துப் பிரிக்கும் தன்மையையும் ஒழுக்கத்தையும் நிலைநாட்டுகிறான். இவனுக்கு வேலை தானாகத் தேடி வருகிறது.

முன்னவர் சினிமா பார்ப்பேன் என்று முகமலர்ச்சியுடன் கூறும்போதே அவருக்கு அதில் இருக்கும் ஆசை புலனாகி விடுகிறது. ஆனால் தான் அவ்வளவு விரும்பும் ஒரு துறையில் என்னென்ன இருக்கின்றன என்று முழுவதும் விவரமாகத் தெரிந்துகொள்ள அவருக்கு விருப்பம் இல்லை. வெறும் நுனிப்புல் மேய்பவர்தான் இவர் என்பது புரிந்துவிடுகிறது. அப்புறம் எப்படி இவரால் வாழ்க்கையில் வெற்றிபெற முடியும்?

இனி, வேலைக்கு விண்ணப்பம் போடும் ஒரு மனுதாரரிடம் இருந்து தேர்வாளர்கள் என்னென்ன எதிர்பார்க்கிறார்கள் என்பதை அவர்களின் வாய்மொழி மூலமாகவே கேட்கலாமே! **சென்னை மவுண்ட் ரோடிலுள்ள பிரபல மோட்டார் வாகன பராமரிப்பு நிறுவனத்தின் தேர்வுக் கமிட்டியின் உறுப்பினர் கூறுகிறார்:**

எங்களிடம் வேலைக்கு விண்ணப்பம் போடுபவர்களை அவர்கள் மனுக்களிலிருந்தே ஓரளவு கணித்து விடுகிறோம். கையெழுத்து என்பது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரி இருக்கும் என்பது உண்மைதான். ஆனால் அந்த மனுவைப் பூர்த்தி செய்யும்போதுகூட அதற்கு எவ்வளவு தூரம்அக்கறை எடுத்துக்கொண்டார்கள் என்பதைக் கணித்துவிடலாமே!

"First impression is the best impression"

என்பார்கள். அது ஓரளவு உண்மைதான். மனுவை அலட்சியமாகப் பூர்த்தி செய்வது, அடித்து, திருத்தி எழுதுவது, மையைக் கொட்டி வைப்பது, ஏனோ தானோவென்று செய்வது இவையெல்லாமே ஒருவருடைய மனோபாவத்தைக் காட்டிவிடுகின்றன.

பெரும்பாலும் ஒரு விண்ணப்பதாரர் வந்தவுடன் நாங்கள் கேட்கும் கேள்வி ''நாங்கள் யார்?'' என்பதுதான். அனேகமாக90 சதவிகிதம்நீங்கள்இந்தக்கம்பெனியின் ஸ்டாஃப் என்பார்கள். இந்தக் கம்பெனி என்ன செய்கிறது என்று கேட்டால் தெரியாது.

எங்களுடைய தொழிற்சாலை கேட்டிலிருந்து இந்தக் கோடியில் இருக்கும் ஆபீசுக்கு வர, எங்களுடைய எல்லாவித துறைகளையும் தாண்டி வரவேண்டும். வேறு ஒன்றும் செய்ய வேண்டாம், அங்கங்கு மாட்டியிருக்கும் போர்டுகளைப் பார்த்தாலே போதும். சொல்லிவிடலாம். அதாவது சுற்றுப்புறத்தைப் பார்க்கும் ஆவல் இல்லை என்பது புரிந்து விடுகிறது.

'என்னடா, இந்தக் கம்பெனி நம்மை இன்டர்வியூவுக்குக் கூப்பிட்டிருக்கிறதே. இவர்களைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொண்டு போகலாமே!'

என்ற ஆர்வம் வேண்டும். இந்த ஆர்வம்தான் அனைத்திற்கும் முக்கியமானது. நாம் பார்ப்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். மேலும் மேலும் புரிந்துகொள்ள வேண்டும் என்று இருக்குமானால் அவர்களுக்குத் தானாகவே துடிப்பு, உற்சாகம், தோழமை, நிர்வகிக்கும் ஆற்றல் எல்லாம் வந்து விடுகிறது.

அதேபோல பெரும்பாலானவர்களுடைய குணாதிசயத்தை அவர்களுடைய எஸ். எஸ். எல். ஸி. புத்தகம் காட்டிக் கொடுத்துவிடும். மார்க்கை அல்ல நான் குறிப்பிடுவது. பள்ளிக்கூடத்துக்கு இவர்கள் எவ்வளவு நாட்கள் போயிருக்கிறார்கள் என்பதே சொல்லிவிடும்.



(6) அமரும் நிலையும் முக்கியமே. முதுகுத்தண்டு வளையாமல் நிமிர்ந்து அமர்ந்து கொண்டு முன் தொடைகளின் மேல் இரண்டு கைகளையும் பதிய வைத்துக்கொள்ளுங்கள்.

(7) 'இனி நீங்கள் கேட்கலாம்' என்ற பாவனையுடன் புன்னகையுடன் அவர்களை நோக்கலாம்.

(8) கேட்ட கேள்விக்குச் சுருக்கமாக அதே சமயம் அவர்களுக்குப் பல வகைகளிலும் உங்களைப் புரியவைக்கும் முகமாகப் பதில் சொல்லுங்கள்.

(9) பதில் தெரியாத கேள்விக்கு, ஒன்றுக்கொன்று சொல்லிக் குழப்புவதை விட, தெளிவாக 'ஸாரி, எனக்குத் தெரியாது' என்று ஒப்புக்கொண்டு விடலாம்.

(10) விடைபெறும்போது 'நன்றி' சொல்லி அமைதியாக வெளியேறுங்கள்.

தேர்வுக் கமிட்டியினர் உங்களுடைய ஒவ்வொரு அசைவையும் கவனித்துக் கொண்டுதான் இருப்பார்கள். அவை உங்களுடைய இயல்பைக் காட்டிக் கொடுத்துவிடும். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் தெரிந்திருக்கிறதா என்பதல்ல முக்கியம். அதை எப்படிச் சொல்கிறீர்கள் என்பதுதான் முக்கியம். குழப்பம், சர்ச்சை, இசை இருப்புதல் இல்லாத தெளிவான, நேரடியான பதில்களே தேவை. நாளைக்கு நீங்கள் அந்தப் போஸ்டில் அமரும்போது பிரச்னைகளை எப்படி அணுகுவீர்கள் என்பதைத் தான் அவர்கள் பார்க்கிறார்கள்.

எல்லாவற்றையும் விட, உங்கள் மனத்தில் ஒன்று பதிய வேண்டும். தேர்வுக் கமிட்டியினர் உங்கள் எதிரியல்ல என்பது தான். போகும்போது அவர்கள் என்ன கேட்பார்களோ என்ற பயத்துடன் சென்றால் உங்களுடைய நடுக்கம் வெளிப்பட்டு விடுகிறது. உங்களுடைய எதிர்காலத்தின் அமைப்பாளர்களே அவர்கள். அந்தக் கண்ணோட்டத்தில் அவர்களை அணுகுங்கள். பயமில்லாத, தெளிவான, நேரான கண்களால் அவர்களைப் பார்த்துப் பேசுங்கள்.

நீங்கள் நம்பிக்கையானவர் என்பதை அவர்களுக்கு உணர்த்தினால் போதும்.

## தேர்வுகளை அணுகும் முறை:

இப்பொழுதெல்லாம் எழுதும் தேர்வுகளை வைத்தபிறகே நேர்முகத் தேர்வு நடத்துகிறார்கள். இந்த எழுதும் தேர்விலிருந்தும் இவர்களைக் கணித்து விடுகிறார்கள். பல நிறு

(7) 'பளிச்'சென்று கண்ணை உறுத்தும் உடைகளை ஒரு போதும் அணியாதீர்கள்.

(8) பெண்களாக இருந்தால் உயரமாகக் கொண்டை போடுவது, மிகவும் நாகரிகமாக உடை உடுத்திக்கொள்வது இவை ஒருவிதக் குறைந்த எண்ணத்தையேஊட்டும். உயர்ந்த பதவிக்குச் செல்லச் செல்ல எளிமையே தேவை என்றுதான் அநேகமாக எல்லோருமே நினைப்பார்கள்.



நீங்கள் என்ன உடை அணிந்திருக்கிறீர்கள் என்பதை விட அதை எப்படி அணிந்திருக்கிறீர்கள் என்பதுதான் முக்கியம். அதிலிருந்தே உங்களை எடை போட்டுவிடுவார்கள் தேர்வாளர்கள்.

## தேர்வாளர்களை அணுகும் முறை:

(1) தேர்வு அறைக்குள் செல்வதற்கு முன் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தால், உங்கள் முறை வந்தவுடன் நண்பர்களிடம் விடைபெற்றுக் கொண்டு செல்லுங்கள்.

(2) நேராக நிமிர்ந்து சீராக நடந்து சென்று கதவை மெதுவாகத் தட்டிவிட்டுக் கதவைத் திறவுங்கள். பிறகு மீண்டும் கதவை மெதுவாக மூடிவிட்டு, நிமிர்ந்த நடையுடன் தேர்வாளர்களை அணுகுங்கள்.

(3) எப்பொழுதும் புன்னகை பூத்த முகமாக இருத்தல் அவசியம்.

(4) தேர்வுக் கமிட்டியினரைப் பார்த்து லேசாகத் தலைவணங்கி 'குட் மார்னிங்' சொல்லுங்கள்.

(5) அவர்கள் உட்காரச் சொன்னவுடன் 'நன்றி' சொல்லிவிட்டு நாற்காலியை மென்மையாக நகர்த்திவிட்டு அமருங்கள்.



அதாவது படிப்பது என்ற தொழிலைச் செய்யும்போது அதில் அவர்களுக்கு எவ்வளவு தூரம் அக்கறை, ஆர்வம் இருந்திருக்கிறது என்பதையும் புரிந்துகொள்ள முடிகிறது. தான் ஈடுபடும் ஒரு காரியத்தில் அக்கறை காட்டுபவன்தான் எந்தத் தொழிலிலும் அக்கறை காட்டுவான்.

மற்றொன்று, அவன் வரும்போதே வரும் நடை, உடை, பாவனைகளிலிருந்தே புரிந்து கொள்ளலாம். அறைக்குள் வந்து உட்காருவதற்கே நாலு ஜாமமானால், அவன் என்றைக்குக் கொடுத்த வேலையைச் செய்து முடிப்பது?

அடுத்து அவனுக்கு இருக்கும் பொது அறிவையும் சோதிக்கிறோம். அவற்றிலும் அவன் திருப்திகரமாகப் பதிலளித்துவிட்டால் வேலைக்கு எடுத்துக் கொள்கிறோம். ஆனால் இதோடு எங்கள் பணி முடிந்து விடுவதில்லை.

உதாரணத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவனைப் பார்ப்போம். அவனை 'ஊனார்க்'காக நியமித்துச் சில வேலைகளை அவனுக்கென்று ஒதுக்குகிறோம். அவனும் கொடுத்த வேலையை ஒழுங்காக, நன்றாகச் செய்கிறான். சுத்தமாக முடித்துவிட்டு வீட்டுக்குப் போய்விடுகிறான். தானுண்டு தன் வேலையுண்டு என்று நல்லபடியாகக் காலம் தள்ளும் இவனுக்கு நிச்சயம் 'இன்கிரிமெண்ட்' உண்டு. ஆனால் பதவி உயர்வு கிடைக்காது.

சில துடிப்புள்ள இளைஞர்கள் இருப்பார்கள். தனக்கு கொடுத்த காரியத்தைக் கச்சிதமாக முடிப்பார்கள். அவர்களுடைய கற்பனைத் திறன் 'இதை இன்னும் நன்றாகச் செய்யலாமே! இதை இப்படிச் செய்தால் இன்னும் சீக்கிரமாக முடியுமே' என்று எண்ண வைக்கும். அதை அவர்கள் சொல்லும்போது சரியாக இருக்கும்பட்சத்தில் மேலதிகாரிகள் இவர்






களை மட்டம் தட்டுவதில்லை. மகிழ்ச்சியோடு யோசனைகளை ஏற்பார்கள்.

இவர்களுடைய துடிப்பு இவர்களை மேலும் சும்மா இருக்க விடாது. அனைவருடனும் அன்புடன் பழகுவார்கள். ஆபீசுக்கு வந்தவுடன் குசலப் பிரசனம் விசாரித்து தோழமை ஏற்படுத்திக் கொள்வார்கள். லஞ்ச் டயத்தில் நண்பர்கள் புடைசூழ இருப்பார்கள். இவர்களுக்கு ஒரு காரியம் ஆற்ற வேண்டுமானால் பியூன்கூட முதலில் நிற்பான்.

இப்படிப்பட்டவர்களே எதிர்கால நிர்வாகிகள். வெறும் அரட்டை அடிக்கும் சிலரை இதில் சேர்த்துக்கொள்ளாதீர்கள். நம்முடைய கம்பெனி என்ற ஓர் ஆழ்ந்த அன்பும், மேலும் இது நன்றாக வளர வேண்டும் என்ற அக்கறையும், எல்லோருடனும் தோழமையுடன் சென்று ஒரு துறையை நிருவகிக்கும் திறனும் கொண்ட இளைஞர்களையே இங்கு நான் குறிப்பிடுகிறேன்.

இவர்களுக்குப் பதவி உயர்வுகள் கிடைக்கின்றன. மேலும் மேலும் வாழ்க்கையில் முன்னேறிக்கொண்டே செல்வார்கள். 'டாப் மோஸ்ட்' பதவிக்கு, தன் பெயருக்குப் பின் முப்பத்திரண்டு பட்டங்களைப் பெற்றவரை வைக்க முடியாது. ஏனென்னில் இந்தக் கம்பெனியின் முழு சூழ்நிலையும் அவருக்குத் தெரியாது.

நான் குறிப்பிட்ட இந்த இளைஞர்களுக்குத் தெரியும். பெரிய நண்பர்கள் வட்டாரத்தையும், வேலை வாங்கும் திறனையும், அடியிலிருந்து நுனிவரை அத்தனையையும் தெரிந்து வைத்திருப்பார்கள். அனுபவங்கள் தரும் பாடத்தால் மேல் பதவிக்கு வந்து விடுவார்கள். இவர்களே முழு கம்பெனியையும் நிர்வகிக்கக் கூடியவர்கள்.

வேலை தேடுபவர்களுக்கு எல்லாம் நான் சொல்ல விரும்புவது: சிபாரிசு, கள் துடைப்பு என எள்ளளவும் செய்யாதீர்கள். அப்படியே நீங்கள் நினைக்கிறபடியே வைத்துக் கொண்டாலும் ஒன்றுகூடவா 'மெரிட்'படி தரமாட்டார்கள்? அந்த 'மெரிட்' உடையவராக நீங்கள் ஏன் ஆகக் கூடாது? உங்களை நீங்கள் முழுத் தகுதி உடையவராக ஆக்கிக் கொள்ளுங்கள்.



நான் சொல்லும் இந்த உவமை கொஞ்சம் கவித்துவத்துடன் இருந்தாலும் உண்மை உண்மைதான். 'ஆயிரம் மேகங்கள் வந்தாலும் ஒரு சூரியனை மறைத்துவிட முடியாது' என்பார்கள். அதுபோல மாசுமறுவற்ற முழுத் தகுதியுடையவராக நீங்கள் இருந்தால் நீங்கள் முன்னுக்கு வருவதையாரும் தடுக்க முடியாது.

உங்களுடைய எதிரியோ நண்பனோ வெளியில் இல்லை. உங்களுக்குள்தான் இருக்கிறான். எனவே உங்களை நீங்கள் வெற்றியாளராக மாற்றிக் கொள்ளுங்கள். 'பாஸிடிவ்' ஆகவே சிந்தனை செய்யுங்கள். வெற்றி மேன்மேலும் வந்து குவியும்.''

இது, தேர்வுக் கமிட்டியினர் விண்ணப்பதாரர்களிடம் இருந்து எதிர்பார்க்கும் அம்சங்கள். இனி, உங்களுக்குப் பயன்படும் வகையிலுள்ள சில நடை, உடை, பாவனைகளைப் பார்க்கலாமா?

## 'இன்டர்வியூ'வுக்குப் போகும் முறை

உங்களை நேர்முகத் தேர்வாளர்கள் பேட்டி காணுவதற்கு முன் தோற்றத்தைத்தான் பார்க்கிறார்கள். அதுவே முதலில் அவர்கள் மனத்தில் பதிகிறது. எனவே உங்களுடைய உடை கவனத்துடன் அணியப்பட வேண்டும்.

(1) உடைகள் உங்களுடைய அக்கறை, ஆர்வம், அழகுணர்ச்சி, ரசனை இவற்றைக் காட்டுகிறது.

(2) எனவே, உங்களுடைய உடல் தோற்றத்துக்கு ஏற்ற உடை அணிய வேண்டும். (உ-ம்) குண்டாக இருப்பவர்கள் இறுக்கமாக உடை அணிந்தால் அது கேலிக்கூத்தாகத் தான் இருக்கும்.

(3) மிகவும் ஆடம்பரமான உடைகளாகவோ, மிகவும் ஆர்வம் காட்டி அணிந்து கொண்டதாகவோ இருக்கக்கூடாது.

(4) எளிமையான, நன்கு அயர்ன் செய்த எடுப்பான உடைகளை அனைவரையும் கவரும்.

(5) 'ஷூ' பழையதாகவே இருந்தாலும் அதற்குப் பாலிஷ் போட்டு அணிந்தால் அது நீங்கள் சிறுசிறு விஷயத்திலும் கவனம் செலுத்துகிறீர்கள் என்பதைக் காட்டும்.

(6) உங்களுடைய ஷர்ட் பட்டன்களை முழுமையாகப் போட்டிருப்பதும், தலை முடியை ஒழுங்காக வெட்டிக்கொண்டிருப்பதும், பற்களைச் சீராக வைத்திருப்பதும் உங்களுடைய கவனத்தையும் அக்கறையையும் எடுத்துக் காட்டும்.


''ஐயோ! போலீஸ்! போலீஸ்! பொண்ணைப் பார்க்க வந்த இடத்திலே தாலியைக் கட்டச் சொல்றுங்களே, துப்பாக்கியிலே மிரட்டி...''
''இந்த வேட்டையாடறவன் சம்பந்தம் வேண்டவே வேண்டாம்னேனே!...''


பக்த துருவன்
''நீங்க குழந்தை நட்சத்திரங்களா இருக்கும்போது ஆரம்பிச்ச படம் முடியல்லே! யாராவது ஃபைனான்சியரை இழுத்துட்டு வாங்க, உங்க பணம் தந்துடறேன்!''




''பொண்ணுக்கு வரதட்சணையோட குழந்தை பொறந்து ஸ்கூல் அட்மிஷனுக்கு டொனேஷன் பணமும் சேர்த்து இப்பவே கொடுத்திடணும்!''


பால் டெப்போ
பட்டணத்துமாடு: ''நான் தாய்ப் பால் கொடுக்கிறதில்லே! டோக் பால்தான் என் கன்னுக்கு!''


''கண்ட இடத்திலே பணத்தை டெபாஸிட் பண்ணி மோசம் போக வேணும்! என்கிட்டே டெபாஸிட் பண்ணுங்க... 30 பர்சண்ட் வட்டி தர்றேன்! 1000 ரூபா 50 வருஷத்துலே ஒரு லட்ச ரூபா ஆகுது!



அவர்: என்னுடைய துணுக்கு உங்க பத்திரிகையில் பிரசுரம் ஆச்சு சார்! அதற்குச் சன்மானம் அனுப்பவே இல்லையே?

ஆசிரியர்: அதை ஒரிஜினலா முதல்ல எழுதினவருக்குச் சன்மானம் அனுப்பிட்டோம்!

- அ. தெய்வசிகாமணி

ஓ....சத்ரபதி சிவாஜி....

இந்திய வரலாற்றின் இணையற்ற புரட்சித் தலைவன்....

இன்னும் சிறிது நேரத்தில் அல்லது சில கணங்களுள் உனது மூச்சு; உனது பேச்சு அடங்கப் போகின்றன....

சுற்றிலும் மருத்துவர்கள் பம்பரமாகச் சுழன்று தமது பணியில் கண்களைப் புதைத்து சிவாஜியை மீட்க முனைகின்றனர்.

எத்தனையோ 'பதவிகளில் எத்தனையோ பேர்கள். அத்தனை பேரும் அந்த அரண்மனைப் பெருங்கூடத்தில் கண்ணீரும் கம்பலையுமாக நிற்கிறார்கள்.

மெல்லக் கண் மலருகிறான்சத்ரபதிசிவாஜி.

சுற்றிலும் அந்த வீரக் கண்கள் பவனி வருகின்றன.

எங்கே மங்களா தேவி?

உதடுகள் காற்றும் ஒலியுமாக அசைகின்றன.

''மங்களா எங்கே?''

அடுத்த கணமே அவளை அழைத்து வர ஆட்கள் பறந்தனர்.

'ஓ... சத்ரபதி சிவாஜி!...' என்று பலரும் கண் கலங்கி நிற்க....

'ஓ....மங்களா தேவி!' என்று சிவாஜியின் கண்கள் அலைமோதுகின்றன.

அவளது அழகின் கதை; அறிவின் கதை, கதையின் கதை.....

**25,** மே 1677...

வட ஆர்க்காட்டு மாவட்டத்து வேலூரின் வன்மை மிக்க – வரலாறு மிக்க கோட்டையை விழுங்க சிவாஜியின் கண்கள் துடிக்கின்றன.

# கோவி. மணிசேகரன்



மகாராஷ்டிர வீரர்கள் வேலூர்க் கோட்டையை முற்றுகையிடுகின்றனர்.

படைகள் வீரமுழக்கமுடன் புறப்பட்டன. முற்றுகையிட்டன.

ஆ! இந்த வேலூர்க் கோட்டைக்கு எந்த நேரத்தில் திம்மனும் பொம்மனும் அஸ்திவாரம் போட்டார்களோ...

அது கண்ட அவதி மாதிரி எது கண்டிருக்கும் என்று வரலாறு கண்ணீர் சிந்துகிற அளவுக்குப் போரும் பூசலும்....

மனிதர்களுக்கு அமைதியே இராதா என்று அது அழுத அழுகை....

இதோ இன்னமும் அழுது கொண்டிருக்கிறது. உடன் சேர்ந்து அரசன் மூன்றும் ஸ்ரீரங்கனும் அலைமோதி அழுகிறான்.

சிம்ம சொப்பனத்துக்குரிய சிவாஜி சிங்கமெனக் கர்ஜிக்கிறான்.

வேலூரைப் பொறுத்த வரையில் ஒரு மகத்தான மக்கள் பாக்கியம் உண்டு. அந்நியர் எவர் வந்தாலும் மக்களும் எதிர்த்துக் கோட்டையைக் காப்பர். கோட்டைக்குள்ளிருக்கும் ஜலகண்டேசுவரரை மட்டும் அவர்கள் நேசிக்கவில்லை. அந்தக் கோட்டையையும் நேசித்தார்கள். அவர்கள் சொல்லிக்கொள்ளும் மகத்தான பேறு அந்தக் கோட்டைதானே....

மகாராஷ்டிர தளபதி நரஹரி ராவ், எப்படியும் வேலூரை வீழ்ச்சியடையச் செய்ய வீரர்களுக்கு ஓர் உபதேச காண்டமே புரிந்து கொண்டிருந்தான்.

வேலூர்க் கோட்டையில் தளபதி அப்துல்லா கான். அவன் பீஜப்பூர் ராஜ்யத்தின் பிரதிநிதியாகவும் வேலூர்க் கோட்டையின் மகா தளபதியாகவும் இருந்து வந்தான்.

பீஜப்பூருக்கும் — மகாராஷ்டிரத்துக்கும் இடையே அமைந்த பகைப் பாலம், வெறி உணர்ச்சியால் கட்டப்பட்டவை. எனவே இரு தரப்பிலும் வெறி உணர்வுகள் ரத்த நர்த்தனம் புரிந்தன.

வேலூரின் புறப் படைகளும், பொது மக்களுமாக மகாராஷ்டிர வீரர்களுடன் மோதிக் கொண்ட மோதலைக் கோட்டையின் ரகசியச் சாளரத்து வழியாகத் தினமும் கவனிக்கிறான் மூன்றும் ஸ்ரீரங்கன்.

ஆயினும் தளபதி அப்துல்லா கான் கோட்டையினுள்ளிருந்து உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தானே ஒழிய கோட்டைக் கதவுகளைத் திறந்துவிடவில்லை. எத்தனை நாட்களுக்குத்தான் முற்றுகை நீடிக்கும் என்று பார்த்துவிடலாமே!

வேலூர்க் கோட்டையின் பலத்தை அவன் நன்கு அறிவான். பீரங்கிச் சத்தங்கள் அந்தக் கோட்டைக்குப் பனங்காட்டு நரிகளின் சலசலப்பைப் போன்றது.

முற்றுகை நீடித்துக் கொண்டே சென்றது. பதினொன்கு மாதங்கள் ஆகிவிட்டன.

கோட்டையின் ரகசியச் சுரங்கத்து வழியாக உணவுப் பொருள்கள் வருகின்றன. கோட்டைக்கு வெளியே இருந்த எதிரிகள் வேலூரையே சூறையாடத் தொடங்குகின்றனர்.

நிச்சயம் வீழ்ச்சியடைந்து விடுவோமோ என்கிற ஐயம் அரசன் ஸ்ரீரங்கனுக்கு.

## சிந்தனைக்குச் சில...

வாழ்க்கையில் இலை வாழ்க்கை, கிளை-வாழ்க்கை, மர வாழ்க்கை, வேர் வாழ்க்கை என நான்கு வகை உண்டு.

நீ இலையாக வாழ்ந்தால், உதிர்ந்து சருகாகிப் போகிறாய்.

கிளையாக வாழ்ந்தால் சில இலைகளையாவது உற்பத்தி செய்கிறாய்.

மரமாக வாழ்ந்தால் கிளைகளையும், இலைகளையும் உண்டாக்குகிறாய்.

வேராக வாழ்ந்தாலே அனைத்தும் நீயே!

—அமரர் கண்ணதாசன்.

கல்யாணமாகிக் கால் நூற்றாண்டாவது ஆகாதவரை காதல் என்றால் என்ன என்று புரிந்துகொள்ள முடியாது!

—மார்க் ட்வெய்ன்

**- ஆர். அரிகோபி**

ஒரு ஜன சமூகம் சுகமாகவும் சுதந்திரமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதற்குச் சரியான வாழ்க்கைத் திட்டம் வேண்டும். சரிவர நிறைவேறுவதற்காக மக்களுக்கு உண்மை அறிவு வேண்டும். அவர்களுடைய சமயக் கொள்கையும் பண்பாடும் அந்த வாழ்க்கைத் திட்டத்தைத் தாங்கி உதவ வேண்டும்.

—ராஜாஜி

---

என்ன நினைத்தானோ?

திடுமென்று ஜாதக நினைவு...

எத்தனையோ மனைவியர்களுள் கடைசியாக நின்று அறிவு ஜீவியாய் ஒளிர்ந்தவள் மங்களா தேவி.

**த**னது தனிஅறையில் அமர்ந்துகொண்டு, மங்களா தேவியை எதிர்பார்க்கிறான் ஸ்ரீரங்கன்.

எப்போதோ ஒரு நாள் 'சிவாஜி வேலூர்க் கோட்டையை முற்றுகையிடலாம்' என்று கணிதம் போட்டுச்சொன்னஜோதிட பூஷணி அவள்.

உள்ளே நுழைகிறது ஊர்வலப் பதுமை—பேசும் ரதம் — மங்களா தேவி.

''வா, மங்களா! உட்கார்.''

''நானே உங்களைச் சந்திக்க நினைத்தேன், பிரபோ!''

''என்னைக் காண எண்ணினாயா''—வியப்பு.

''ஆமாம், பிரபோ! நான் சிவாஜியிடம் தூது செல்ல வேண்டும்.''

''நீயா? எதற்காக?''

''கோட்டை வீழ்ச்சியடைவது நிச்சயம். அதிலிருந்து காக்க முடியுமா என்கிற முயற்சிக்காகத்தான்!''

'வீழ்ச்சியடைவது நிச்சயம்...'

அதிர்ந்துபோனான் ஸ்ரீரங்கன்.

எதைக் கேட்க வந்தானோ அதற்குப் பதில் கிடைத்து விட்டது.

''நீ போய்....?''

''தயவுசெய்து எதையும் கேட்க வேண்டாம். எல்லாரும் சிறைப்பட்டுப் பூனாவுக்குப் போவதற்குப் பதிலாக நான் தூது போவது...''

''நீ மட்டும் பூனாவுக்குச் செல்லவா?''

''என் தலைவிதி அவ்வாறு இருந்தால் போய்த் தீருகிறேன். சிவாஜி ஒரு சத்திய புருஷன்.''

''வேஷம்! அப்படி ஒரு நடிப்பு மன்னன்! அவனிடம் நீ சென்று என்ன சாதிக்கப் போகிறாய்?''

''நீங்கள் நினைப்பது போல் நான் அவரை நினைக்கவில்லை.''

''இப்படிப் பெண்களைக் கவர்ந்துதான் அவன் பேரரசை நிர்மாணித்துக்கொண்டு வருகிறான்.''

''தயவுசெய்து என்னைத் தியாகம் பண்ணினேன் என்று விடுங்கள். அவரது ஜாதகம் என் கையில். நான் இந்தக் கோட்டையைக் காத்தாக வேண்டும்.''

ஸ்ரீரங்கன் பதில் ஏதும் சொல்லவில்லை. மௌனம்....

**ஸ்ரீ**ரங்கன் இளைய மனையாள் தூது வருகிறாளா....

சத்ரபதி சிவாஜி தாய்க் குலத்தின் மேல் மரியாதை உடையவர். எனவே மலையடிவாரத்துக்கு வந்து கூடாரம் அமைத்து மங்களா தேவிக்காகக் காத்திருந்தான்.

**''வ**ணக்கம்!'' இனிதான உருது மொழியில் வணக்கம் சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தாள் மங்களா தேவி. தனக்கு மகாராஷ்டிரம் தெரியாது. சிவாஜிக்கு உருது தெரியுமே...

''உட்காரம்மா!''

''சத்ரபதி! இந்தமுற்றுகைதேவைதானா?''

''உங்கள் பெயர்?''

''நான் அரசரின் இளைய ராணி.''

''செய்தி அறிவித்துச் சென்றவன் சொன்னான். பெயரைச் சொல்லவில்லை.''

''மங்களா தேவி!''

''மங்களமான பெயர். முற்றுகை எனக்குத் தேவையில்லை. உங்கள் கோட்டை தேவை.''

''ஒன்றைச் சொல்லுவேன். வருத்தப்படக் கூடாது. பிற நாடுகளை, மதத்தவர்களை முற்றுகையிடலாம். இப்போது சொந்த சகோதரர்களாகிய இந்துக்களையே சம்ஹாரம் செய்கிறீர்களே, அது எந்தக் கொள்கை?''

ஒரு கணம் அதிர்ந்து போனார் சிவாஜி.

''உங்களால் பதில் சொல்ல முடியவில்லை. உங்களால் தமிழ் நாட்டைக் கட்டிக் காக்க முடியாது.''

மேலும் விழிக்கிறார் சிவாஜி.

''உங்கள் ஜாதகத்தை நான் அறிவேன். உங்கள் ஜோதிடரை ஒரு சமயம் நான் பீஜப்பூருக்குப் போனபோது சந்திக்கிற வாய்ப்பு எதிர்பாராமல் ஏற்பட்டது. என்னிடம் அவர் சில திசா நாதன்களைப் பற்றியும் புத்தி நாதன்களைப் பற்றியும் ஏற்பட்ட ஐயங்களைத் தீர்த்துக் கொள்ள வந்திருந்தார்.''

# ஈறுகளை பலப்படுத்துவீர். பற்களுக்கு நீண்ட ஆயுளை அளிப்பீர்.

## ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது போர்ஹென்ஸ் ஒன்றில்தான்.

**இதன் விசேட சுவையே இதன் செயல் திறனுக்குச் சான்றாகும்!**

போர்ஹென்ஸ் அஸ்ட்ரிஞ்ஜெண்ட் விசேட முறையில் ஈறுகளைப் பாதுகாக்கிறது. இந்த அஸ்ட்ரிஞ்ஜெண்ட் வீக்கத்தைத் தடுத்து வலி விழுந்து மெத்துமெத்தென்று இருக்கும் ஈறுகளை சுருக்கி பலப் படுத்துகிறது. பலமான ஈறுகள் மட்டுமே உறுதியான பற்களின் ஆதாரமாகும். நீண்ட ஆயுளும் அளிப்பதாகும். உறுதியான பற்களுக்குக் கூட பலமான ஈறுகளின் ஆதாரம் தேவை. அதனுல் தான் உங்களுக்குத் தேவை போர்ஹென்ஸ்... அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கிய இணையற்ற டூத்பேஸ்ட்.




## நம்பகமான போர்ஹென்ஸ்

பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்

288 F 203 TAM

''உங்களிடமா?''

''நான் ஜோதிட மகா சிகாமணி பிரகஸ்திரரின் சிஷ்யை.''

''என்ன! பிரகஸ்திரரின் சிஷ்யையா?''

''ஆமாம் சத்ரபதி! ஏறத்தாழ இரண்டாண்டு காலமே உயிர் வாழப்போகும் நீங்கள் எதற்காக ஒரு சுயராஜ்ய ஸ்தாபகர் என்ற புகழிலிருந்து இறங்கி, ஒரு இன வெறி ஸ்தாபகன் என்கிற இழி நிலைக்குத் தயாராகிறீர்கள்?''

பலமாக அதிர்ந்துபோனார் தட்சிணத்து வீரப் பயங்கரன் சிவாஜி.

நான் இன்னும் இரண்டாண்டில் இறந்து படுவேனா?

''நிஜமாகத்தான் சொல்கிறீர்களா மங்களா தேவி!''

''சத்தியம். எனது ஜோஸ்யம் பொய்த்தது இடையாது. அநேகமாக பங்குனி மாதத்தில் பரலோகம் செல்வீர்கள். இடையில் இரண்டாண்டுகள் அவ்வளவே!''

''மங்களா!''

அதிர்ந்து அலறுகிறார் அரிமா சிவாஜி.

''எனது ஜோஸ்யம் பொய்த்தது கிடையாது. ஏன் இந்த மானுடர்களை வதைக்கிறீர்கள்? உங்கள் கொடி வேலூருக்குச்செல்லாது. தஞ்சையில் சில காலம் பறக்கலாம், பல காலம் பறக்க முடியாது.''

''யாரங்கே?''

உரத்த குரலில் கூவுகிறார்.

காவலர்கள் உள்ளே நுழைகிறார்கள்.

''இவளைக் கைது செய்யுங்கள்.''

''சத்ரபதி! நீங்களா?''

''நானேதான்!''

மங்களா தேவி கைது செய்யப்பட்டாள். குறையற்ற அறிவு ரதம் சிறைப்பட்டுக் கண்ணீர் சிந்தியது.

**22,** ஜூலை 1678.

வேலூர்க் கோட்டை வேதனை சூழச் சரணடைந்தது.

ஆனால் யாரையும் சிறைப்படுத்தவில்லை.

மூன்றும் ஸ்ரீரங்கன் முன்னிலையிலேயே முடி சூட்டிக் கொண்டார் சத்ரபதி சிவாஜி.

''ஸ்ரீரங்கரே! உங்களை யாரும் சிறைப்படுத்தாதன் காரணம், மங்களா தேவி சிறைப்பட்டு என்னுடன் வருகிறாள்! எனது இறப்பின் தேதியை ரொம்பவும்தைரியமாகக் குறித்துக் கொடுத்திருக்கிறாள்! அவ்வாறு நான் இறந்து பட்டால் மங்களா தேவிக்கு விடுதலை; இந்த வேலூர்க் கோட்டைக்கும் விடுதலை. அதுவரை வேலூர் எனதுஆட்சியின் கீழ் இருக்கும். நீங்கள் எனது பிரதிநிதியின் கீழ் கண்காணிப்புடன் இருக்கலாம்.''

ஓ...மங்களா தேவி...

அகழியிலிருந்த நீரே அழுதது.

**3**-4-1680...

கனகமணிக் கட்டிலில் மீளாத துயிலுக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்த சிவாஜியின் உயிர் அலை மோதிக் கொண்டே மங்களாவின் வருகைக்காகக் காத்திருக்கிறது.





மங்களா தேவியைத் தூக்கிக் கொண்டு வருகிறார்கள்.

''பிரபோ! மங்களா தேவி விஷம் அருந்தி விட்டார்கள்!''

விஷமா? ஏன் அருந்த வேண்டும்? நான் மனத்தால் கூடத் தொட்டது கிடையாதே?

''மங்களா... என் சாவை நீ பார்க்க வேண்டாமா?''

''பங்குனி பிறந்ததுமே பார்த்தாய் விட்டது. உங்கள் சாவைப் பார்த்துவிட்டுத்தான் என் உயிர் போகும்.''

''நீ எதற்காகச் சாக நினைத்தாய்? நான் உனக்கு ஒரு குறையும் வைக்கவில்லையே!''

தட்டுத் தடுமாறிக் கேட்கிறார் சிவாஜி.

தட்டுத் தடுமாறி மங்களாவும் பதில் சொல்கிறாள்.

''இத்தனை மாதங்கள் உங்கள் பாதுகாப்பில் இருந்து நானே நான் வேலூர் சென்றால் என் கணவர் என்னை ஏற்றுக் கொள்ள மாட்டார். உங்கள்வெளிநடப்புக்களை வேஷம் என்று நினைப்பவர் அவர். இப்பேர்ப்பட்ட அழகியை அறிவு ஜீவியை சிவாஜி விட்டு வைத்திருப்பானா என்றே நினைத்திருப்பார். இங்கேயும் சிறை வாசம், அங்கேயும் வன வாசம்! தேவைதானா. சொல்லுங்கள் சத்ரபதி!''

கடைசி வரிகள் சத்ரபதி சிவாஜியின் காதுகளில் நுழையவில்லை.

'ஓ... என்ன தவறு செய்து விட்டோம்' என்று நினைக்கிறபோதே...

அவர் உயிர் பறந்தது!

அவள் உயிரும் பறந்து கொண்டிருந்தது.

## விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாத்'தாக.

# தாராசிங் பலப் பயிற்சித் திட்டம்

**உயரம் ஏற்றும் உடற்பயிற்சிகள்**

வலதுதோள் சுவரோடு ஒட்டும்படி நில், மூச்சை உள்ளிழுத்தபடி கால்கட்டை விரல்களால் எழும்பு. இடது கரத்தைத் தலைக்கு மேல்வீசி, எட்டின உயரம் சுவரைத் தொடு. மூச்சை வெளிவிட்டவாறு கீழே மீளு. இடது கரத்தால் 10 தடவை, வலது கரத்தால் 10.



பாதங்களை அகட்டு (இடைவெளி 10 அங்.) நில்; மூச்சை உள்ளிழுத்தபடி கால்கட்டை விரல்களால் எழும்பியவாறு, இரு கரங்களையும் வீசித் தலைக்குமேல் எட்டின உயரம் தூக்கு, விரல்கள் சந்திக்கும்வரை. மூச்சை வெளிவிட்டவாறு கீழே மீளு. 10 தடவைகள்.



கால்நீட்டி உட்காரு: இயன்ற தூரம் கால்களை அகட்டு. மூச்சை உள்ளிழுத்தபடி முன்புறம் குனிந்து, இருகைகளால் இடது பாதத்தையும் தலையால் முழங்காலையும் தொடமுயல். மூச்சை வெளிவிட்டவாறு கீழே மீளு. இடது கால்புறம் 10 தடவை, வலது கால்புறம் 10.



பருகுவாய் தினமும் பலம்பெருக்க நியூட்ரமுல். அமுல் பால்வளம், அருமையான மால்ட், ஆரோக்கிய வைட்டமின்கள், ஆர்வமிகு புரதம், ஆதார உலோகதாதுக்கள், சப்புக்கொட்டிட சாக்லேட் சுவை. அவ்வளவுக்கும் விலையோ மலிவு.. போர்ன்விடா, பூஸ்ட், மால்டோவா எதனையும் விட.





daCunha/GCM/69/82/TM

நியூட்ரமுல் துணையால்... கட்டுடல், தெம்பு, தொட்டதெல்லாம் பலிதம், உச்ச உணர்வு...உன் பெயரைச் சொல்லுதடா: 'நியூட்ரமுல் வஸ்தாத்' !




அமுல் படைப்பு

# நியூட்ரமுல்

விற்புமுதல் விற்போர் :
குஜராத் கோ ஆபரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெட். லிட்.,
ஆனந்த், குஜராத்.





''என்னுடைய பாட்டி எல்லோருடைய பாட்டியையும் போலவே மிகவும் வயதானவள். எனக்குத் தெரிந்து கடந்த இருபது வருடங்களாகவே அவள் கிழடு தட்டிப்போய் இப்படித்தான் இருக்கிறாள். ஆனாலும் நானும் என் பாட்டியும் நல்ல நண்பர்கள். பள்ளிக்கூடம் போவதற்கு முன் எனக்குச் சில காய்ந்துபோன சப்பாத்திகளைத் தருவாள். மீதியை நாய்களுக்குப் போடக் கொண்டு போவாள்.''

-பாட்டியைப் பற்றி ஒரு சிறுகதையில் குஷ்வந்த் சிங் நகைச்சுவையாக எழுதியிருக்கும் விதம்



மத்தியானம் மூன்று மணிக்குப் பரீட்சை ஆரம்பம். பைனல் பரீட்சைகளின் முதல் பேப்பர்.

நேற்றுக் காலைதான் ஜுரம் விட்டிருந்தது. இன்னும் பலவீனமாகத்தான் இருந்தது! ''பரீட்சை ஹாலுக்கு டாக்ஸியில் போ, கோபு! டேக் இட் ஈஸி... மனசைப் போட்டு அலட்டிக்காதே'' என்றார் அப்பா அலுவலகம் செல்லு முன்.

அவர் போனதும் கோபு அம்மாவிடம் சொன்னான்: ''எனக்குக் கோபம் கோபமாய் வரது.''

''யார் மேல்?''

''என் அதிர்ஷ்டத்தின் மேல். சரியாய் ப்ரிப்பேர் கூடப்பண்ண முடியலையே அம்மா!''

''ஒரு வார 'வைரஸ் ஃபீவர்' என்றால் லேசில்லே கோபு!'' என்றாள் ஜெயம்.

''நல்ல வேளை. வருஷம் முழுதுமே கவனமாய்ப் படிச்சிருக்கேன். அந்த ஞாபகத்தில் தான் எழுதணும். இப்படியா இந்த ஜுரம் சமயம் பார்த்துச் சதி செய்யும்!''

அவனுடைய அங்கலாய்ப்பு ஜெயத்துக்கு நன்றாகப் புரிந்தது. பள்ளியில் அடி வைத்த நாளிலிருந்து வகுப்பில் முதலாவதாகத் திகழும் மாணவன் கோபு. அந்தத் தகுதியைப் பெற அவன் அயராமல் உழைத்தான். அதை இழப்பதென்பதை அவனால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது.

இது கல்லூரியில் இறுதி ஆண்டு. ஒரு வாரம் அடித்த ஜுரத்தில் கை கால்கள் துவண்டு விழுந்தாற்போல் ஓர் ஓய்ச்சல். சுறுசுறுப்பாக இயங்கும் புத்திக்கு இந்த உடலால் ஈடு கொடுக்க முடியாது என்பது போன்ற பலவீனம். மூன்று மணி நேரம் தன்னால் எழுத முடியுமா என்றுகூட அவனுக்குச் சந்தேகமாயிருந்தது.

ஜெயம் வெந்நீர் வைத்திருந்தாள். குளித்து விட்டு வந்தான். நாவெல்லாம்



காசியில் உள்ள பிர்லா மந்திர் போன்ற பெரிய கோவில்களில் மூலவர் விக்கிரகங்களைப் பார்த்தால் நமக்கு ஆச்சரியமாக இருக்கும். சலவைக் கல்லில் பளபளக்கும் விக்ரகங்களுக்கு என்ன உடை தெரியுமா? ராமர், கிருஷ்ணருக்கு மஸ்லின் ஜிப்பா, மில் வேஷ்டி. சக்திக்கும் ராதைக்கும் வண்ண நைலக்ஸ் புடவை. ம்.... இங்கே சாயம் போன புடவை.... அழுக்கேறிய வேஷ்டி! -லலிதா செல்லப்பா

# ருக்மிணி பார்த்தசாரதி

கசந்தது. ஜவ்வரிசிக் கஞ்சியில் தயிரும் உப்பும் இட்டுக் கொடுத்தாள். ''இதை இப்போது சாப்பிடு... வாசனையாய் மிளகு ரசம் பண்ணித் தரேன்!'' என்றாள். அவளுடைய கரிசனம் இதமாயிருந்தாலும் உணவு என்று நினைக்கும்போதே வயிற்றைக் குமட்டியது. இரண்டு வாய் விழுங்கிவிட்டுக் கஞ்சியை வைத்து விட்டான்.

புத்தகங்கள் ''வா வா'' என்று அழைத்தன. ஆசையாக அவற்றை எடுத்து வைத்துக்கொண்டான். மூன்று மணி நேரம் நிம்மதியாய்ப் படிக்கலாம்.

புழுக்கத்துக்கு இதமாக மின் விசிறியைச் சுழல விட்டான்.

பத்து நிமிடங்கள் கூடப் படித்திருப்பானோ என்னவோ? திறந்திருந்த ஜன்னல் வழியே இரண்டு குருவிகள் பறந்து வந்து சுழலும் மின் விசிறியைச் சுற்றிப் பறந்து சர்க்கஸ் வித்தைகள் காட்டின. மின் விசிறியின் மேல் பாகத்திலிருந்த கிண்ணத்தில் கூடு கட்டுவதற்கான முயற்சி இது என்பதைக் கோபு உடனே புரிந்து கொண்டான்.

''பாவம், ஃபானில் அடிபட்டால் இறந்து விடுமே!'' என்று பதறியவனாய்க் கோபு விசிறியின் வேகத்தைக் குறைத்துவிட்டுக் குருவிகளை விரட்டி ஜன்னலை மூடினான். மறுபடியும் படிப்பில் ஆழ்ந்தான்.

''பட்'' என்று ஒரு சப்தம். குருவி ஒன்று விசிறியில் அடிபட்டு அவன் படுக்கை மேல் விழுந்தது. இது எப்படி வந்தது? ஜன்னலை மூடியிருந்தேனே!

''என்ன பைத்தியக்காரத்தனம்! இந்த ஓர் அறையில் ஜன்னலை மூடிவிட்டால் தீர்ந்ததா? வீடு முழுதும் ஜன்னல்களைத் திறந்து வைத்திருக்கிறாளே, அம்மா, காற்றோட்டமாக இருக்க!''

குருவி உடல் அசைக்காமல் படுத்திருந்தது. கண்களில் மட்டும் சலனம். வலிக்கிறதா அதற்கு? அடி எங்கே பட்டது?

அவன் அதன் அருகே சென்று குனிந்தான்.

சட்டென்று அச்சத்தால் அசைவு பெற்று அது பறக்க ஆரம்பித்தது. ஆனால் உயரப் பறக்க முடியவில்லை. புத்தகங்கள் அடுக்கியிருந்த அவன் மேஜை மேல் சோர்வுற்று விழுந்தது.

மறுபடியும் உடலில் அசைவில்லை. கண்களில் மட்டும் சலனம்.

இறகுகளில் அடிபட்டிருக்கிறது. நல்லவேளை, ஃபானின் வேகத்தைக் குறைத்திருந்தான். இல்லாவிட்டால்...

விசிறியை நிறுத்திவிட்டு ஜன்னலைத் திறந்தான். தான்படித்துக் கொண்டிருந்த புத்தகங்களை மட்டும் எடுத்துக் கொண்டு சமையலறைக்குச் சென்றான்.

''என்ன கோபு?'' என்றாள் ஜயம்.

''குருவி ஒண்ணு என் அறையில் ஃபானில் அடிபட்டு விழுந்திருக்கு அம்மா... நான் ஹாலில் படிக்கிறேன்....''

''ஐயோ பாவமே! உயிர் இருக்கா?''

''இருக்கு... பறக்க முடியலே. வலிக்கிறது போலிருக்கு..ரொம்பப்பயந்துபோயிருக்கு!''

''தொந்தரவு பண்ணாமல் விட்டால் சரியாய்ப் போயிடும்.''

மணி பன்னிரண்டு.

''சாப்பிட வா கோபு! வாய்க்குப் பிடிக்கிறதோ இல்லையோ ஏதாவது சாப்பிடு. மூன்றுமணி எழுத பலம்தான்வேண்டாமா?''

அவனுக்கு அந்தக் குருவியின் நினைவு வந்தது. அதுவும்தான் பசியோடு கூடவலியோடு, பயத்தோடு...

கையில் கொஞ்சம் அரிசியை எடுத்துக் கொண்டு அவன் தன் அறைக்குச் சென்றான். குருவி அவன் மேஜை மேல் அப்படியே அசைவற்றுக் கிடந்தது.

அதனருகே சென்றான். அதன் கண்களில் சலனம் அதிகரித்தது. இருந்த இடத்தை விட்டு நகராமலேயே – இறகுகள் வலிக்காமலேயே அது அரிசியைத் தின்னட்டும் என்று எண்ணியவனாய் மேஜைமீதும் தரையிலுமாக அதன் அருகே சில அரிசிமணிகளைச் சிதறிய போது....

அது மறுபடியும் அஞ்சிப் பறக்க யத்தனித்து, களைத்து இரண்டடிக்கு அப்பால் விழுந்தது. மறுபடியும் உடலில் அசைவில்லை. கண்களில் பயம், பயம், பயம்!

''இதற்கு இப்போது தேவை உணவில்லை. நிம்மதி'' என்று நினைத்தவனாய்க் கோபு தன் அறைக் கதவைச் சத்தமில்லாமல் மூடிவிட்டுச் சமையலறைக்கு வந்தான்,






CHOPPER என்று ஒரு புது சைக்கிள் இப்போது பிரபலமாகிக்கொண்டு வருகிறது. சாதாரண சைக்கிளை விட உயரம் சற்றுக் குறைவு. பல சிறப்பு அம்சங்கள் கொண்டது. (உடனே கண்டுபிடித்து விடுவீர்களே, அது வெளிநாட்டு சரக்காகத்தான் இருக்க வேண்டுமென்று!) வேகத்தை அதிகரிக்க மூன்று கியர்கள் உண்டு. அதிக ஒளிதரும் பிரகாச லைட் முன்புறம். கிட்டதட்ட மொபெட் மாதிரியான ஒரு தோற்றம். விலை இந்தியாவில் 1700 ரூபாய். சைக்கிளின் சொந்த ஊர் இங்கிலாந்து.

---

மிக மிகக் களைப்பாக இருந்தது.

மணக்க மணக்க மிளகு ரசம் வார்த்தாள் அம்மா.... சிறிதளவு சாதத்தில் அதை ஓட ஓட விட்டுக் கொண்டு சாப்பிட்டான். நாவில் அத்தனை சுசப்பில்லை. ஓர் ஆரஞ்சுப் பழத்தை அவன் கையில் வைத்தாள். சுளை சுளையாய்ச் சாப்பிட்டபோதெல்லாம் அந்தக் குருவியின் நினைவாகவே இருந்தது.

இரண்டு மணிக்கு மேல் பரீட்சை எழுதப் புறப்படுவதற்கு முன் மறுபடியும் குருவியைப் பார்த்துவிட்டு வந்தான்.

அதே நிலையில் படுத்திருந்தது. உறங்குகிறதோ? உடலில் ஒரே சீரான துல்லிய ஏற்றம், இறக்கம்.

தாமதமாக வந்தான் கோபு.

''இப்படி செலக்டட் கேள்விகளுக்கு மட்டும் தரோவாக ப்ரிப்பேர் பண்ணிண்டு பரீட்சைக்குப் போறது இதுதான் முதல் தடவை!'' என்று குறைப்பட்டுக் கொண்டான்.

''அதைப் பத்தியே நினைச்சு வருத்தப் படாதே!'' என்றாள் ஜெயம் மிருதுவாக.

கோபு கிளம்பி விட்டான் டாக்ஸி ஸ்டாண்டை நோக்கி.

சுமார் மூன்றரை மணிக்குக் கோபுவின் அறைக் கதவை ஓசைப்படாமல் திறந்து கொண்டு உள்ளே சென்றாள் ஜெயம். குருவி மேஜை மீதுதான் இருந்தது. ஆனால் தன் கால்கள் மேல் நின்றிருந்தது. தலையை இப்படியும் அப்படியுமாகத் திருப்பிற்று. அவளைப் பார்க்கிறதோ? ''சௌக்கியமா?'' என்று விசாரிக்கிறதோ?

அவள் மனத்தில் குப்பென்று மகிழ்ச்சி பொங்கிற்று.

ஐந்து மணி வரை அவள் வீட்டு வேலைகளில் மும்முரமாக இருந்தாள். கோபுவை நினைத்துக் கொண்டாள். குழந்தை பரீட்சை ஹாலில் கஷ்டப்படுகிறானோ என்னவோ? சட்டென்று குருவியை நினைத்துக் கொண்டாள். மகனின் அறைக்கு விரைந்து, கதவை மெள்ளத் திறந்தாள்.... அங்கே...

குருவி தரையில் இருந்தது. குதித்துக் குதித்து அரிசி மணிகளைத் தின்று கொண்டிருந்தது. பசி ஆறவில்லை போலிருக்கிறது! ஒரு மணி கிடைத்தாலும் ஆவல் மயமாகக் கொத்தித் தின்றது.

ஜெயம் விரைந்து சென்று பிடி நிறைய அரிசியை அள்ளி வந்தாள். அறைக் கதவுக் கருகே நின்று கொண்டு அரிசியைத் தூவினாற் போல் எறிந்தாள். குருவி ஆனந்தமாகக் குதித்துக் குதித்து அரிசியைக் கொத்திக் கொத்தித் தின்றது.

மறுபடியும் ஜெயம் கதவை மூடிவிட்டு வந்தாள்.

முக்கால் மணிக்குப் பிறகு அவள் கதவை மிக மிக ஜாக்கிரதையாகத் திறந்து கொண்டு அறைக்குள் அடி மேல் அடி எடுத்து வைத்து நுழைந்தாள். எங்கே குருவி காலுக்கடியில் மாட்டிக் கொள்ளுமோ என்ற பயம்.

தரையில் அவள் வீசின அரிசி மணிகள் பாதிக்கு மேல் அப்படியே இருந்தன.

குருவியைக் காணவில்லை.

அவள் கட்டிலுக்கடியில் குனிந்து பார்த்தாள். மேஜை மீது தேடிப் பார்த்தாள். நாற்காலியை மெதுவாக நகர்த்தி விட்டுப் பார்த்தாள்.

குருவி இல்லை. திறந்த ஜன்னல் வழியே காற்றுத்தான் ரம்மியமாக வீசிக் கொண்டிருந்தது.

ஜெயம் மெய் மறந்தவளாக ஜன்னல் வழியே பார்த்தாள். மரங்களும், கிளைகளும் இலைகளும் புல்லும் மண்ணும் கல்லும், புஷ்பங்களும், இந்தக் காற்றும்... இந்த இனிய மாலைப் பொழுதும்...

கவலையின்றிப் பறக்கும் குருவிகளின் கீச்சுக் கீச்சும்.....

''குருவிகளே! எங்கள் வாழ்க்கையில் இன்று சற்று நேரம் பங்கேற்றது உங்களுள் யார்? நீயா? இல்லை நீயா? என் மகனின் அறையில் அடிபட்டு விழுந்து, குணமாகி, மரக் கிளைகளுக்கே பறந்து சென்று, இந்த மாலைப் பொழுதையே தெய்வீகமாக்கிய நீ யார்?''

உடல் சிலிர்த்து ஓய்ந்தது. மிருதுவாக, மென்மையாக ஜன்னலை மூடினாள் ஜெயம். மேஜையைத் துடைத்துச் சுத்தம் செய்தாள். தரையைப் பெருக்கி அரிசியைத் திரட்டி, அகற்றினாள்.

மகிழ்ச்சி மயமாய் அறையை மூடாமல் வெளியே வந்தாள்.

கோபுவை நினைத்துக்கொண்டாள் ஜெயம். பரீட்சை எழுதிக் கொண்டிருப்பான் இப்போது. நன்றாக எழுதியிருப்பான். தரோவா ப்ரிபேர் செய்த கேள்விகளே வந்திருக்கும். கட்டாயம்.... அவன் அறையில் அடிபட்டு விழுந்த குருவி குணமாகிப் பறந்துவிட்ட சுபதினமல்லவா இன்று?




இலங்கை வானொலியில் சமீபத்தில் ஒரு பாடலின் நடுவே தடங்கல் ஏற்பட்டபோது அறிவிப்பாளர், "இந்தத் தடங்கல் பற்றி ஒலிப்பதிவாளரிடம் கேட்டால்..." என்று சொல்லிவிட்டு "கனவிதுதான், நிஜம் இதுதான் உலகினிலே என்ன யார் வெல்லுவார்? விதி யார் வெல்லுவார்?" என்ற பாடலை ஒலிபரப்பினர். தடங்கலுக்கு வருந்துகிறோம் என்று சொல்லாமல் பாடல் மூலம் நாசூக்காகத் தெரிவித்தார். விவித் பாரதி இதைப் பின்பற்றலாமே? -வி. முருகவேள்



# வேடிக்கை மனிதர்கள்

**ராஜீவ்:**

ஆள் மாராட்டக் கதையில் இவருக்கு அடித்திருக்கிறது யோகம். இரட்டை வேடம். பணத்தில் புரளும் சேகர் — ஏழைக் குடிசையில் பிறந்த சுப்பையா இருவரும் தற்காலிகமாக இடம் மாறுகிறார்கள். பத்து நாள் ஒப்பந்தம். பதினோராவது நாள் சுப்பையா தன் மீசையை இடது கையால் ஒதுக்கி விட்டுக்கொள்வது போல ஒப்பந்தத்தையும் ஒதுக்கி விடுகிறான். இவன் நிரந்தரமாக மாளிகையில் தங்க, சேகர் குடிசைக்கு அழைத்துச் செல்லப்பட்டு விடுகிறான்.

ஏமாற்றப்பட்டவன் ஏமாற்றியவனை எப்படிப் பணிய வைக்கிறான் என்பதில்தான் வேடிக்கை ஆரம்பமாகிறது.

இரு வேடங்களைப் பாகுபடுத்திக் காட்டும் பக்குவம் தெரிந்திருக்கிறது ராஜீவுக்கு. சேகரை விட சுப்பையா பலே.

**விஜயசாந்தி:**

சேகரைக் காதலிக்கும் நடிப்புக் கல்லூரி மாணவி. இவரைக் கதாநாயகியாகத் தேர்ந்தெடுத்ததே வேடிக்கைதான்.

**வனிதா, ஹேமா:**

டைனிங் டேபிளில் முறைப் பையனுக்குப் பக்கத்தில் உட்காருவதில் அத்தை மகளுக்கும் மாமன் மகளுக்கும் போட்டி வருகிறது. (மாமன் மகள் வனிதா) இவர்களது போட்டியில் தெரியும் வேடிக்கை நடிப்பில் இல்லை தான்.

**கே. ஏ. தங்கவேலு:**

இவர்தான் பூசணிக்காய் மாமா. ஊரிலிருந்து பூசணிக்காயோடு வந்தவர் படம் முடியும்வரை 'பூசணிக்காய் ஜபம்' செய்கிறார். நல்ல வேடிக்கை!

**தேங்காய் சீனிவாசன்:**

சீனியர் தங்கவேலு படத்தில் இருப்பதாலோ என்னவோ இந்த ஜூனியர் ஓரம் கட்டிவிடுகிறார். கதைக்கு மங்களம் பாடும் போதாவது வந்தாரே. மகிழ்ச்சி.

**சில்க் சுமிதா:**

ரசிகர்கள் 'வேடிக்கை' பார்க்க வாய்ப்பில்லாமல் வந்து போகிறார். பாவம் சென்சார்!

**பி. வி. பாலகுரு:**

'கன்னிப் பருவத்திலே' படத்தை இயக்கிய அதே பாலகுருதான். அடேயப்பா! நல்ல ஞாபகசக்தி இவருக்கு. அந்தக் காலத்தில் வந்த ஆங்கிலப் படக் கதையை மறக்காமல் நினைவில் வைத்திருப்பதே வேடிக்கைதான். குழப்பம் ஏதும் இல்லாமல் கதையை ஒழுங்காகச் சொல்லிக் கொண்டு போயிருக்கிறார். வேதனைப்படாமல் பார்க்கலாம்.

**-திரைஞானி**



''மாதுளம் பழத்தை உடைத்தால் அதில் அநேக முத்துக்களைக் காணலாம். ஒரு முத்து இருந்த இடத்தில் வேறொரு முத்தைப் பதித்தால் பொருந்தாது. மனித இதயமும் மாதுளம் பழம் போன்றதுதான். தன்னுடைய இதயத்தில் ஒருவனுக்கோ அல்லது ஒருத்திக்கோ இடம் கொடுத்துவிட்டால் அதை மாற்றி மற்றொருவருக்கு இடம் கொடுப்பது சாத்தியமல்ல.''

-ஒரு காதல் திருமண மத்தியஸ்தத்தின்போது ராஜாஜி கூறியது. - கமல தியாகராஜன்.

# பம்பாய் போலீஸில்

இன்று ஒரு சாதாரண மனிதன் ஒரு விபத்து அல்லது திருட்டு நடந்து விட்டால் 'போலீஸ் வரை போக வேண்டுமா?' என்று யோசிக்கிறான். 'இதனால் எத்தனை தொல்லைகளோ; எத்தனை நேரம் வீணாகுமோ' என்று பயப்படுகிறான்.

காலை பேப்பரைப் பிரித்தால் கொலை, கொள்ளை, சங்கிலி அறுப்பு, கற்பழித்தல்... இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். தனி ஒருவனுக்கோ, ஒரு குடும்பத்துக்கோ, ஒரு கிராமத்துக்கோ பாதுகாப்பே இல்லை!



இதையெல்லாம் மனத்தில் கொண்டு அடிஷனல் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆஃப் போலீஸ் திரு ராமச்சந்திரன் அவர்களைப் பேட்டி கண்டபொழுது அவர் கூறுகிறார்: ''ஜனங்கள் மாறிவிட்டார்கள். முன்பு ஒரு குற்றவாளியைப் பிடித்து 'நீ திருடினாயா?' என்று கேட்டால் முதலில் 'இல்லை' என்பான். பிறகு ஒத்துக்கொள்வான். இனிமேல் 'செய்வாயா' என்றால் 'மாட்டேன்' என்பான். இன்று ஒரு குற்றவாளியிடம் ''குற்றம் செய்தாயா?'' என்றால் உடனே ''ஆமாம்'' என்கிறான். ''இனிமேல் செய்வாயா?'' என்றால், ''செய்வேன். வேறு வழி?'' என்கிறான்!''

கேள்வி: ''மக்கள் வறுமையாலும், வளர்ந்த சூழ்நிலையாலும் தவறு செய்கிறார்கள் இது இயற்கை. ஆனால் வசதியான குடும்பங்களைச் சேர்ந்த படித்தவர்கள் இதே குற்றங்களைச் செய்யும்போது என்ன செய்வது? சட்டமும், தண்டனையும் எல்லோருக்கும் பொது. ஆனால் அல்ப சந்தோஷத்துக்காகக் குற்றங்களை யார் வேண்டுமானாலும் செய்கிறார்களே! இன்றைய சமூகம் எங்கே போகிறது? இதன் எதிர்காலம் என்ன?''

திரு ராமச்சந்திரன்: ''இளம் சமுதாயத்திற்கு நல்ல கல்வி, உடல் வளர்ச்சியோடு ஆரோக்கியமான மன வளர்ச்சி, கட்டுப்பாடான வாழ்க்கை இவை ஆரம்பத்திலிருந்தே அமையும்படி செய்ய வேண்டும். நல்ல




சமீபத்தில் பெங்களூரில் உள்ள விபூதிபுரத்தைச் சேர்ந்த நண்பர்களின் கழகம் முட்டாள்களின் கூட்டம் ஒன்றை நடத்தியது. அறிவு ஜீவிகள் சமூகத்தினரால் புறக்கணிக்கப்படும் முட்டாள்களுக்கு உதவுவதே இந்தச் சங்கத்தின் நோக்கமாகும். இந்தியா முழுவதும் ஏப்ரல் முதல் தேதியை விடுமுறை தினமாக அறிவிப்பது,சிறந்த முட்டாள் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவருக்கு 'அஞ்ஞானபீடா' என்ற தேசிய பரிசை அளிப்பது இந்த இரண்டு கோரிக்கைகளை நிறைவேற்றும்படி மத்திய அரசிடம் இந்தச் சங்கம் கேட்டுக்கொள்ளப் போகிறதாம்.

டெக்கான் ஹெரால்டு-ஆ. பானுமதி

# திருச்சி ராமச்சந்திரன்

புத்தகங்கள், விளையாட்டுக்கள் இவற்றால் நல்ல சமுதாயத்தை உருவாக்க முடியும். பேப்பரைத் திறந்தால் 'பதினாறு வயதுப் பையன் மூன்று வயது சிறுமியைக் கற்பழித்தான்' எனக் கொட்டை எழுத்துக்களில் போடுகிறார்கள். இந்நிகழ்ச்சிக்கு இவ்வளவு விளம்பரம் தேவையா?

''மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் தமது சமுதாயத்தை நன்றாகப் பேணி வளர்ப்பது கடமை இல்லையா? 'தனி ஒருவனாக நான் செய்து என்ன ஆகப் போகிறது' என்று ஒவ்வொருவரும் தன் காரியத்திலேயே குறியாக, தான், தன் சுகம் என்று வாழ ஆரம்பித்ததால்தான் இன்று குற்றங்கள் மலிந்து விட்டன. இதற்கு ஒரே பக்கமாகப் போலீசாரை மட்டும் குறை கூறி என்ன பயன்?

''பாதுகாப்புக்காகத்தான் நாங்கள் இருக்கிறோம். பம்பாயை எடுத்துக் கொண்டால் 8,30,000 மக்கள் வசிக்கிறார்கள். 25,000 போலீஸ்காரர்கள் இருக்கிறார்கள். இதில் சரி பாதி நகரத்தில் நடக்கும் ஸ்டிரைக்குகள், ஊர்வலங்கள் இவைகளுக்கே சரியாகப் போய்விடுகிறது. பெரிய நகரங்களில்தான் குற்றங்களும் அதிகம். ஜனங்கள் பாதுகாப்புக்கு எங்கள் கடமையைச் செய்து வருகிறோம்.''

தவிர சமூக சேவையிலும் ஈடுபடுகிறார்கள். எப்படி? மனஸ்தாபங்களாலும் குடும்பக் கஷ்டங்களினாலும், சினிமா ஆசையாலும் பம்பாய்க்கு ஓடிவரும் பெண்களை ரயில்வே ஸ்டேஷனிலேயே பிடித்துப் பாதுகாப்பு விடுதிகளுக்கு அனுப்பி போலீஸ் அதிகாரிகளின் மனைவிமார்களை அவர்களிடம் பேசச் சொல்லி, வீடு திரும்ப விரும்புபவர்களைத் தகுந்த பாதுகாப்போடு அனுப்பி வைக்கிறார்கள். இதேபோல் பல சேவைகள் விளம்பரமில்லாமல் நடக்கின்றன.

திருச்சி, தென்னூர் பழைய அக்ரஹாரத்தில் பிறந்த திரு ராமச்சந்திரன் தாய்மொழி தெலுங்கு. பட்டம் பெற்ற பின்கல்லூரியில் பேராசிரியராக இரு ஆண்டுகள் பணியாற்றி




னார். 1955ல் போட்டிப் பரீட்சையில் நல்ல ரேங்கோடு தேறி பம்பாயில் போலீஸில் சேர்ந்தார். மகாராஷ்டிர மாநிலத்தில் பல இடங்களில் பன்னிரண்டு ஆண்டுகள் போலீஸ் சூப்பரின்டெண்டெண்டாகப் பணியாற்றிய பின் 1972ல் அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர்–ஜெனரல் ஆஃப் போலீஸாக ஆனார். மூன்று மாதங்கள் ஐரோப்பாவில் பயிற்சி பெற்றார். பம்பாயில் பஜாஜ் மானேஜ்மெண்ட் இன்ஸ்டிடியூட்டில் மானேஜ்மெண்ட் பயிற்சி பெற்றிருக்கிறார். பம்பாய் பல்கலைக் கழகத்தில் பி. எச்.டி. செய்கிறார். 1974, 1980 ஆண்டுகளில் சிறந்த போலீஸ் வீரருக்கான மெடல்களைப் பெற்றார்.

காலையில் ஒரு மணி நேரம் லலிதா சஹஸ்ரநாமம், ஆதித்ய ஹிருதய ஸ்தோத்திரம் முதலியவைகளைப் பாராயணம் செய்யும் திரு ராமச்சந்திரன் இதன் மூலம் நாள் முழுவதும் குற்றவாளிகளைச் சமாளிக்கச் சக்தி பெறுவதாகக் கூறுகிறார். கலவரப் பகுதிகளில் கடும் நிலைமை ஏற்பட்டால்கூட அந்த ஒரு மணி நேரப் பிரார்த்தனை கடமையைச் சரிவரச் செய்ய உதவுகிறதாம்.

**—லட்சுமி கண்ணன்**

# சரணம் கணேசா - 2


தலையிழந்த இக்குழந்தையின் உடலில் ஒரு மிருகத்தின் தலையைப் பொருத்தி விட்டால், இது மனிதனுமில்லாமல் மிருகமுமில்லாத சிருஷ்டியாகிவிடும்.... இதோ பார்... யாரங்கே?


கைலைக்கு வெளியே வடக்கே தலை வைத்து ஒரு யானை சாகும் தறுவாயில் கிடக்கிறது. அதன் தலையைக் கொய்து வாருங்கள்.


பூதகணங்கள் கொன்று வந்த யானைத் தலையைப் பார்வதி குழந்தையின் உடலில் பொருத்தினர்.
ஓம்....ம்!


கஜமுகாசுரனைக் கொல்ல வந்துள்ள இந்தக் கஜமுகனே நம் அருமைக் குழந்தை.

கதை: **ரா. கணபதி** படக்கதை அமைப்பு: **வாண்டுமாமா** / சித்திரம்: **விஜு**

















புதிய

கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்

# பல்லுக்கு உறுதி தருவது











ஃப்ளோரிகார்டில் உள்ள எம்

**எஃப்பி ஃப்ளோரைட் எனுமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.**

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM



கொடுப்பதில் நான்கு வகை உண்டு. தனிப் பாடல் விளக்கம் தருகிறது ''கேளாதபோது தானாகவே வலியவந்து ஒன்றைக் கொடுப்பது தாராள மனப்பான்மை; போய்க் கேட்ட பிறகு ஒன்றைக் கொடுப்பது வல்லமை; மீண்டும் மீண்டும் விடாமல் கேட்ட பிறகு ஒன்றைக் கொடுப்பது கால் நடைக் கூலி; அவ்வாறு மீண்டும் மீண்டும் போய்க் கேட்ட பிறகும் ஒன்றும் கொடாமலிருப்பது வம்ச அழிவு.''

## குடும்பம் ஒரு கதம்பம்

# மாமாவுக்கே முதல் உரிமை







இது உங்கள் குடும்பத்தில் நடந்திருக்கலாம்; இல்லையென்றால் உறவினர்களிடையே நடந்திருக்கலாம்; நடக்காமலும் போயிருக்கலாம். நடப்பதற்கான சாத்தியக் கூறுகளும் உண்டு.

இனியும் இப்படி நேர்ந்து விடக் கூடாது என்பதற்காகச் சில யோசனைகள், சில குறிப்புக்கள் — கொஞ்சம் அன்புடன், அக்கறையுடன், சில சமயம் கண்ணில் நீருடன் தருகிறேன். தயவு செய்து யாரும் நான் மேடை ஏறி விபூதி தந்து அறிவுரை வழங்குவதாக நினைத்துவிட வேண்டாம்.

பொதுவாக நம் குடும்பங்களில் எல்லாவற்றிலும் ஒரு நம்பிக்கை, ஆசை, உறவு விட்டுப் போய்விடக்கூடாது என்ற வார்த்தை தான்.

'போகாத உறவும், கேட்காத கடனும் போச்சு!'

அடிக்கடி உங்கள் பாட்டி இப்படிப் புலம்பி இருப்பாள்.

இது உண்மைதான். உறவுகள் அன்போடு இயைந்தவை. நன்றாக இருக்கும்போது ஆயிரம் பேர் சுற்றி நிற்பார்கள். ஒரு கஷ்டம் என்று வந்து விட்டால்.... கல்லடி பட்ட காக்கை கூட்டம்தான்! ஆனால் அன்பான உறவினர்கள் நம்மோடு எந்த நிலையிலும் கைகோத்து வருவார்கள். எனவே வேண்டியதுதான், உறவினர்கள் தொடர்பு.

இது அன்பிற்குத்தான்!

திருமணத்துக்கு அல்ல!

உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருத்தராவது தன் சொந்தக்காரரைத் திருமணம் செய்து கொண்டிருப்பார். சொத்து பிரிந்து விடக் கூடாது. உறவு மறந்துபோய் விடக் கூடாது என்று ஆயிரம் குதூகலமான பேச்சுக்கள்.

இன்றைக்கும் கொஞ்சம் தெற்கே போனால் பெண்ணுடைய மாமனின் அனுமதியில்லாமல் மற்றவர்கள் பெண் பார்க்க வரமாட்டார்கள். ஏனென்றால் தாய் மாமனுக்கே முதல் சொந்தம், உரிமை எல்லாம்!

ஆனால் உங்கள் குடும்ப மருத்துவர் கராடியாய்க் கத்துவதைக் கொஞ்சம் கேளுங்களேன்—

''மாமனைத் திருமணம் செய்துகொள்வது என்பது சொந்தத் தந்தையை, தாயை மணப்பதற்குச் சமம்!''

இப்படிச் சொன்னாலே அருவருப்பாக இருக்கிறது இல்லையா? ஒரே வழி ரத்தத்திலும் எப்படித் திருமணம் நடைபெற முடியும்?

நானே கண்ணால் கண்ட இரண்டு குடும்பச் சரித்திரங்கள்—



## தம்புரா வித்வான்!

''தம்புரா போடுவதும் ஒரு கலைதான், நீயும் ஒரு வித்வான்தான்'' என்று அன்போடு வேங்கடராமனை முதலில் அழைத்தவர் வீணை பாலச்சந்தர். சமனி, பிட்டிபாபு, லால்குடி, டி. என். கிருஷ்ணன் என்று இவரை எல்ல வித்வான்களுமே விரும்பி அழைக்கிற அளவு என்ன சிறப்பு?

''ஒன்றுமேயில்லை. பங்க்சுவாலிட்டியும் டிஸிப்ளினும்தான் முக்கியம். அதனால்தான் என்னை எல்லோரும் விரும்புகிறார்கள்'' என்று பதில் தருகிறார் இந்தத் தம்பூரா வித்வான். மயிலாப்பூர் பி. எஸ். உயர்நிலைப் பள்ளியில் உடற்பயிற்சி ஆசிரியராக வேலை பார்க்கும் இவர் கிரிக்கெட் ஆட்டத்திலும் ஈடுபாடு உடையவர். முதல் டிவிஷன் ஆட்டங்களில் முன்பு ஆடியதுண்டு.

நாலு குழந்தைகளில் ஒருவனுளை கல்யாண சுந்தரம் மிருதங்கத்தில் தேர்ச்சிபெற அண்மையில் அரங்கேற்றம் ஆயிற்று.

-பெஸ்பால்

---

பிள்ளை வேண்டும் என்று மீண்டும் மீண்டும் கருத்தரித்தாள் அவள். ஆறு பெண்களுக்கு அப்புறம் அருமையாகப் பிள்ளைச் செல்வம் பிறந்தான். இவனுக்கு மூன்று வயதாகும் போதே பெரிய பெண் கல்யாணத்துக்கு வளர்ந்து விட்டாள். அவளுக்குக் கல்யாணமும் பண்ணி வைத்தார்கள். ஒரே வருஷத்தில் தலைச்சனுகப் பெண்ணைப் பெற்றாள்.

சொந்தம் விட்டுப் போகலாமா? தொட்டிலிலேயே அருமைப் பிள்ளைக்கும், அக்கா மகளுக்கும்தான் என்று முடிச்சுப் போட்டுவிட்டார்கள். இந்தக் கல்யாணம் ரொம்ப நாளைக்கு முன்னாடி நடந்துவிடவில்லை.

மூன்று வருஷங்களுக்கு முன்தான் 'அந்த'த் திருமணம் நடந்தது. விளைவு—

முதல் குழந்தை குறைப் பிரசவம்.

அடுத்தது இரண்டு வயது வளர்ந்து மரணம்!

மூன்றாவது ஆறு மாதத்தில் அபார்ஷன்.

இதைப் படிக்கும் பெண்கள் ஒரு நிமிஷம் நினைத்துப் பாருங்கள். ஒரு கர்ப்பம் தரித்தாலே அதனால் வரும் கனவுகள், கற்பனைகள் கஷ்டங்கள்... மூன்றும் மூளியாகிப்போனால்? டாக்டர்கள் எல்லோரும் போனவுடன் கேட்டார்கள், ''நெருங்கிய சொந்தத்தில் கல்யாணம் பண்ணிக் கொண்டீர்களா?'' என்று.

இன்னொரு கதை சொல்லட்டுமா?

தன் தம்பியைத் தம்பியாக நினைக்காமல் குழந்தையாக நினைத்து வளர்த்தாள் அக்கா. ஆசையோடு தன் மகளை அவனுக்கே மணமுடித்து வைத்தாள். பிறந்தன முத்து முத்தாக இரண்டு. ஒன்று ஆண்; மற்றொன்று பெண். இரண்டும் ஊமைகள்!

'அடடா, என்னமாய்க் கதை சொல்கிறீர்கள். நானே என் அக்கா பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேன். நன்றாகத்தான் இருக்கிறது எங்கள் குடும்பம்' என்று உங்களில் ஒருவர் புன்னகை செய்யலாம்.

ஆமாம், உங்களில் ஒருவர்தான்!

நீங்கள் விபத்திலிருந்து தப்பிய அதிர்ஷ்டசாலி. ஆனால் உலகத்தில் எல்லோருமே அதிர்ஷ்டசாலி இல்லையே, என்ன செய்வது?

'இதெல்லாம் தெரிந்த கதைதான். மாமாவைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று சொல்ல ஆரம்பித்து எத்தனையோ வருடங்கள் ஆகிவிட்டன. 'புளித்த கதை' என்று சொல்லிவிடுவீர்கள். ஆனால் நான் மேலே சொன்ன இரண்டு கதையும் நட்ட நடு மெட்ராசில், நாகரிகமான, படித்த குடும்பத்தில் சமீபத்தில் நடந்தவை!

ஒரு நிமிடம் நினைத்துப் பாருங்கள். கல்யாணம் உங்களோடு முடிந்து விடவில்லை. விளைவை ஏற்கும் அந்த எதிர்காலச் சந்ததிகள்! அவர்களின் வாழ்க்கை?

அன்பும், ஆதரவும், நாகரிகமும், விட்டுக் கொடுக்கும் பாங்கும், காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் தன்மையும்... இன்னும் எவ்வளவோ சொல்லிக் கொண்டே போகலாம், ஓர் அன்பான குடும்பத்தில் அடிப்படைத் தத்துவங்களைப் பற்றி. இவையெல்லாம் மன, உடல் ஆரோக்கியம் நிறைந்த குடும்பங்களுக்கு மட்டுமே. அங்கே ஒரு ஊனம் இருந்தால்... எல்லா நாகரிகப் பண்புகளும் தூள் தூளாகி வெடித்துச் சிதறிப் போய்விடுகிறது.

அழகான மேல் தோல் வழண்டு ரத்தமும் சதையும் நிணமுமாக அருவருப்பாகிறது. வேண்டாம் இந்த அவல நிலை. உங்களுக்குத் தெரிந்தவர் யாரேனும் இப்படிச் செய்து கொள்ள நேர்ந்தாலும் அவர்களைக் கையெடுத்துக் கும்பிடுங்கள், வேண்டாமென்று!

நெருங்கிய சொந்தத்தில் மட்டுமில்லை புதிய சம்பந்தத்திலும் கூட அபூர்வமாகச் சில சமயம் பிறக்கப் போகும் குழந்தைக்குச் சிக்கல்கள் தோன்றுவதுண்டு. இதைத் தவிர்க்கத் திருமணத்துக்கு முன் குடும்ப டாக்டரின் யோசனை கேட்பதும் சில சமயம் அவர் ஆலோசனைப்படி ரத்தப் பரிசோதனை செய்து கொள்வதும் நல்லது.

-மஞ்சுளா ரமேஷ்

# இறக்கை விரிக்கும் இயற்கை

—புவனா சந்திரன்—

### வெளுத்தல்

மேக அழுக்குத் துணியை
மின்னல் சேவகன்
இடி கல்லில் துவைத்து
மழைப் பூக்களைப் பிழிய
வான மங்கையின்
ஆடை வெளுத்தது!

### வெட்கம்

வேட்டி மடித்துக் கட்டி
வரப்பில் நடந்து செல்லும்
மனிதர்களைப்
பார்க்க வெட்கியோ
நெற்கதிர்கள் தலைகுனிந்தன?

### முயற்சி

வானத்தில் படிந்த
மேக ஒட்டடையை
நீக்க முயலும் பூமி
—பாக்கு மரங்களால்!

### தேய்பிறை

பௌர்ணமி நிலவில்
முழுதாய் வார்த்த
நிலவுத் தோசையை
ஒவ்வோர் இரவும்
கொஞ்சம் கொஞ்சமாய்த்
திருடித் தின்பது யார்?

### வைத்தியம்

நிலத்தோலின்
வெடிப்பு நோய்
போன இடம் தெரியவில்லை
இயற்கை
மழை ஊசி
போட்டவுடன்!

## 30

தூரத்து இடிமுழக்கம் படிப்படியாக நெருங்கிவருவதுபோல் தஞ்சையைநெருங்கிக் கொண்டிருந்தது சோழர் படை. சேனை எழுப்பிய புழுதிப் படலம் கருமேகங்கள் அடிவானத்தில் திரண்டு முன்னேறுவது போலிருந்தது. முரசங்கள் குறிப்பிட்ட தாள கதியில் அதிர அவற்றைச் சுமந்த யானைகள் திமுதிமுவென ஓடி வந்தன. குதிரைகள் இலகுவாக அவற்றுடன் போட்டியிட்டுப் பாய்ந்தன. தேர்ச் சக்கரங்கள்




கடகடவென்ற ஒலியுடன் உருண்டன. இந்தச் சத்தங்களுக்கு மேலாக ''வெற்றிவேல் வீர வேல்''என்று சேனை வீரர்களின் ஆயிரக்கணக்கான கண்டங்கள் ஒருசேர ஆர்ப்பரிக்க நாற்படைகளும் முன்னேறின.

அனைவருக்கும் முன்பாகச் சென்ற விஜயாலயன் நெடிதுயர்ந்து வளர்ந்த புரவி பரணி மீது கம்பீரமாக வீற்றிருந்தான். காலை இளம் பரிதியின் ஒளியில் பரணியின் கருமேனி ஆரோக்கியமாகப் பளபளத்தது. அதன் மேல் ஆரோகணித்திருந்த விஜயாலயனே ஆதித்தனே ஆகாயத்தை விட்டு இறங்கி வந்து விட்டானோ என்று கருதும் படி பிரகாசித்தான். மார்பிலே தரித்திருந்த கவசமும் காதிலே தொங்கிய குண்டலமும் தலையணியில் பொருத்தியிருந்த ரத்தினங்களும் சூரிய ஒளியைப் பிரதிபலித்து ஒளிர்ந்தன.

படை புறப்படுகையில் எதிரே வந்து சேர்ந்த பாராசிரயனை எண்ணியபோது விஜயாலயனுக்கு இப்போது சிரிப்பு வந்தது

**பிளேடு ஜோக்:**

''யார் விமானத்தைக் கண்டுபிடிக்கவில்லை?''
''ராங் பிரதர்ஸ்.'' (கண்டுபிடித்தவர்கள் ரைட் பிரதர்ஸ்)

என்றாலும் அப்போது ஒரு கணம் துணுக் குறத்தான் செய்தான். 'எதற்காகஇவர் இப்போது வருகிறார்?பல் லவேந்திரர் அனுப்பிய செய்தி மாதண்ட நாயகருக்குகிட்ட வில்லையா?' என்று யோசித்தான்.

பல்லக்கை விட்டு இறங்கி ஊன்று கோல் உதவி யுடன் நின் றவர் சொன்னார்: ''விஜயாலயா! கலங்காதே! உன்னைத் தடுக்க நான் வரவில்லை; வழிய னுப்ப வந்திருக்கிறேன்!''

இவன் முகம் மலர, ''ஆசி வேண்டு கிறேன். வாழ்த்தி அருளுங்கள்'' என்றான்.

''அதைச் செய்ய முடியாது அப்பனே! அப்புறம் பல்லவேந்திரரும் நானுமாகச் சேர்ந்து உன்னைத் தூண்டி விட்டதாக அர்த்தம் கற்பிக்கப்படும். சக்கரவர்த்தியின் கட்டளை அதுவல்ல.''

''பின் எதுவோ?''

'' 'உன் தஞ்சைப் படையெடுப்புக்கு ஆதரவு காட்டவும் வேண்டாம்; தடுத்து நிறுத்தவும் வேண்டாம்', என்பது ஆணை! என்ன வேடிக்கை பார்த்தாயா!''

இவர் என்னை ஆழம் பார்க்க விரும்பிப் பேசக் கொடுக்கிறார் என்று எண்ணிய விஜ யாலயன் எச்சரிக்கையுடன் கூறினான்: ''பல் வேந்திரர் 'எந்தச் சமயத்தில் எப்படிஎண்ணு வார் என்றுஅவருக்கும்கடவுளுக்கும் மட்டுமே தான் தெரியும் என்றும் அவருடைய ஒவ் வொரு சொல்லுக்கும் செயலுக்கும் ஆழ்ந்த உட்பொருள் இருக்கும் என்றும் நீங்களே பல முறை சொல்லி யிருக்கிறீர்களே!''

''அதென்னவோ தமக்குக் கீழ் உள்ள சிற்றரசர்கள் ஒருவரோடொருவர் யுத்தம் செய்ய சக்கரவர்த்தி அனுமதிப்பதும் அதில் ஒருவனுக்கு முக்கியத்துவம் தருவதும் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை.''

''வாழ்த்த வாய் வரவில்லையென்ற ாலும் சபிக்காமலாவது இருக்கலாம்!''

''நான் ஏன் சபிக்கப் போகிறேன்? சரி சரி. நீ கவலையின்றிச் சென்று வா. நான் உன் தகப்பனாரைக் கவனித்துக் கொள் கிறேன்!'' வழி விட்டு ஒதுங்கினார் பாராசிரயன் — மனமின்றியே.

இப்போது நினைத்துப் பார்த்த போதுபாராசிரயனின் கூர் மதியை விஜயாலயனால் வியக்காமலிருக்க முடியவில்லை. 'பல்லவ சக்கர வர்த்தியின் ஆணையை மீறு வது மாதண்ட நாயகருக்குச் சாத்தியமல்ல என்றாலும் தாம் இந்தச் சந்தர்ப்பத் தில் பல்லவேந்திரரிடம் கருத்து வேறு பட்டிருப் பதை அவர் விஜயாலய னுக்குத் தெளிவாக்கிவிட் டார். சக்கரவர்த்தியின் முடிவு விஜயாலயனுக்கு அனுகூலமாக இருக்க லாம். ஆனால் பல்லவரின் நோக்கில் பார்த்தால் பாரா சிரயனின்



# அருள் வாக்கு

தினமும் தூங்கப் போகு முன்பு இன்று ஜன சமுதாயத்துக்கு நாம் ஏதாவது கைங்கர்யம் பண்ணினோமா, என்று கேட்டுக் கொள்ள வேண்டும். ஈச்வரனைப் பற்றிப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று தேவாரத்தில் சொல்லியிருக்கிறது. அந்த மாதிரி நாம் பரோபகாரம் பண்ணாமலே ஒரு நாள் போயிற்று என்றால், அது நாம் பிறவா நாளே — அன்றைக்கு நாம் செத்துப் போனதற்குச் சமம்தான் — என்று வருத்தப் பட வேண்டும். பந்துக்கள் செத்துப்போனால் நமக்குத் தீட்டு என்று, ஒரு புண்ய கார்யத்துக்கும் உதவாமல் ஒதுக்கி விடுகிறார்கள். நாமே செத்த மாதிரி என்றால் இதுதான் பெரிய தீட்டு. பரோபகாரம் செய்யாத ஒரு தினத்தில் புண்ணியத்தின் பக்கத்திலேயே நாம் போகவில்லை, தீட்டுக்காரர்களாகிவிட்டோம் என்று உணர வேண்டும்.

நாம் எத்தனை சின்னவர்களாக இருந்தாலும் நம்மாலும் முடியக்கூடிய சின்னத் தொண்டு இல்லாமலில்லை. இப்படி அவரவரும் தனியாகவோ, ஸங்கமாகச் சேர்ந்தோ ஏதாவது பொதுநலக் கைங்கரியம் பண்ணியே ஆக வேண்டும். தண்ணீர் இல்லாத ஊரில் ஒரு பத்துப் பேர் சேர்ந்து கிணறு வெட்டுவது; ஏதோ ஒரு பிள்ளையார் கோயில் மதில் இடிந்திருந்தால் அதை நாலு பேராகச் சேர்ந்து கட்டுவது. பூஜை நின்றுபோன ஒரு கிராமக் கோயிலில் ஒருகாலப் பூஜைக்காவது நாலு பேரை யாசித்து மூலதனம் சேகரித்து வைப்பது; பசுக்கள் சொறிந்து கொள்வதற்கு ஒரு கல்லேனும் நாட்டுவது; நாம் படித்த நல்ல விஷயங்களை நாலு பேருக்குச் சொல்லுவது, எழுதுவது; இரண்டு சுலோகமாவது பாசுரமாவது நாமாவளியாவது பாடி நாலு பேர் மனஸில் பகவானைப் பற்றிய நினைப்பை உண்டாக்குவது, குப்பை கூளங்களைப் பெருக்குவது. —இந்த மாதிரி ஏதாவது தொண்டு அன்றன்றும் செய்ய வேண்டும். ஓசைப் படாமல் செய்ய வேண்டும் என்பது முக்கியம்.

குடும்பக் கடமைகளை விட்டு விட்டு ஸோஷல் சர்வீஸ் என்று கிளம்ப வேண்டியதில்லை. அதையும் விடாமலே இதுவும் கடமை என்ற உணர்வோடு சேர்த்துக் கொண்டு செய்ய வேண்டும்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசாரிய சுவாமிகள்

கணிப்பே சரியானது. முத்தரையனுக்குப் பாடம்கற்பிக்க விரும்பினாலும் சக்கரவர்த்தி அதைத் தமது மாதண்ட நாயகர் மூலம்தான் நிறைவேற்றிக் கொண்டிருக்க வேண்டுமேயன்றி விஜயாலயனைப் படையெடுக்க அனுமதிப்பது ராஜ தந்திரமாகுமா?

ராஜபாட்டைதான் என்றாலும் விஜயாலயனின் படைகளுக்கு அதன் அகலம் போதவில்லை. பக்கத்து வயல் வெளிகளிலும் தோப்புக்களிலும் இறங்கி நடந்தார்கள். குதிரைகளையும் செலுத்திச் சென்றார்கள். வழி நெடுக இருந்த சிற்றூர்களில் மக்கள் என்னமோ ஏதோ என்று வியப்புடன் எட்டிப் பார்த்துவிட்டுப் பிறகு பயத்துடன் வீடுகளுக்குள் புகுந்து கதவை அடைத்துக் கொண்டார்கள். இடையில் ஓடிய காவிரியின் பல கிளை நதிகளிலும் இருந்த மரப் பாலங்களைப் பயன்படுத்தி ஒன்றன் பின் ஒன்றாக ரதங்கள் மெல்லக் கடந்தன. அவை அக்கரை சேரும்வரை பொறுத்திருக்கப் பிடிக்காமல், யானை, குதிரைகளை நீரில் இறக்கினார்கள். வீரர்கள் பலர் உற்சாகத்துடன் நீந்திக் கரை ஏறினார்கள். இதனால் ஆற்று நீர் கலங்கிப் பழுப்பு நிறம் பெற்றது.

இன்னும் அரைக் காதம் சென்றால் தஞ்சைக் கோட்டை கண்ணுக்குத் தென்படும் என்ற கட்டத்தில் எதிரே ஒரு வீரன் குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு வெகு வேகமாக வருவது தெரிந்தது. பாய்ந்த வேகத்தில் நீண்ட குதிரையின் வாலின் தொடர்ச்சி போல் தோன்றிய புழுதிப் படலம் பின்னால் படர்ந்து பம்மிப் பருத்து வானில் உயர்ந்தது.

குதிரை அருகில் நெருங்க நெருங்க 'ஒருவேளை அது ஜெயசிங்கனாக இருக்குமோ' என்ற விஜயாலயனின் சந்தேகம் தெளிவாயிற்று. 'அவனேதான்! எதற்காக, என்ன அவசரச் செய்தியுடன் இப்படித் தலை தெறிக்கக் குதிரையைச் 'செலுத்தி வருகிறான்? விஜயாலயன் படையெடுத்து வருவது பற்றித் தனக்கு ஏதொன்றும் தெரியாதது போல் கலை விழாவுக்குப் பொறுப்பேற்று நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டு போக வேண்டியவனாயிற்றே! அந்த ரகசியத் திட்டத்தில் ஏன் இந்தத் திடீர் மாற்றம்?' அருகில் வந்த குதிரை திடுமெனக் கடிவாளம் இழுத்துப் பிடிக்கப்பட்டதால் வந்த வேகத்தில் முன் கால்களை மேலே தூக்கி நின்று பெரிதாகக் கனைத்தது. கீழே குதித்த ஜெயசிங்கன் விஜயாலயனை விரைந்து நெருங்கவும் இளவரசனும் பரணியை ஒரு முறை தட்டிக் கொடுத்து விட்டு இறங்கினான்.

''ஜெயசிங்கா!'' என்று கடுமைக் குரலில் அழைத்தான்.

மண்டியிட்டு வணங்கி எழுந்தான் ஜெயசிங்கன். ''பிரபோ! மன்னிக்க வேண்டும்! அதி முக்கியமான செய்தியானதால் தான் தங்கள் ஆணையை மீறித் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே வந்தேன்.''

''இங்கேயே பேசலாம்'' என்றான் விஜயாலயன், படை வீரர்கள் மரியாதை



படத்தில் இருக்கும் நூறு ரூபாய் நோட்டைக் கவனித்தீர்களா? அப்படியென்ன அதில் விசேஷம்? அது ரூபாய் நோட்டே அல்ல! சேலத்தில் நடைபெற்ற துணிக் கண் காட்சியின் போது வினியோகிக்கப்பட்ட விளம்பர நோட்டீஸ் தான் அது! -கீதாபஞ்சு

காட்டிச் சற்று எட்டவே நின்றனர். அருகில் இருந்தவன் ஆகவ மல்லன் ஒருவனே.

''இளவரசே! இந்தப் படையெடுப்புக்கே அவசியம் இல்லை என்று தோன்றுகிறது. அனாவசியமான யுத்தத்தையும் உயிர்ப் பலியையும் தடுக்கவே ஓடோடி வந்தேன்!''

''அவசியமில்லையாவது? எனக்கும் சோழ வள நாட்டுக்கும் முத்தரையர் குலமகள் உத்தமசீலியால் நேர்ந்த அவமானத்தை மறந்து விட்டாயா? அல்லது என்னை மறக்கச் சொல்கிறாயா?''

''பிரபோ! அவள் தன் தவற்றை உணர்ந்து மனம் மாறிவிட்டாள். அதைக் கூறத்தான் வாயு வேகத்தில் வந்தேன்.''

''அழகுதான்! அவள் நினைத்தால் என்னை ஏளனம் செய்து சிரிக்க வேண்டியது. பிறகு திடீரென்று மனம் மாறி என்னை மதிக்க வேண்டியது! அதற்கேற்ப நானும் படை திரட்டவும் படை யெடுக்கவும் பின்வாங்கவும் படை கலைக்கவும் வேண்டுமாக்கும்! சிறுபிள்ளைத்தனமாகவல்லவோ இருக்கிறது!''

ஜெயசிங்கன் இளவரசனை ஏறிட்டுப் பார்த்தான். ''போர் என்பது மட்டும் சிறுவர்களின் விளையாட்டா? உங்கள் நோக்கம் எதுவோ அது நிறைவேறிய பிறகு பகை எதற்காக? உத்தமசீலி உங்களைக் காதலிப்பதாக உறுதியாக எனக்குத் தெரியும். திவாகரன் பேச்சைக் கேட்டு உங்களை மறுத்து ஏளனம் செய்ததன் மூலம் தன் எதிர் காலத்தையே பாழடித்துக் கொண்டு விட்டதாக அவள் உணர்ந்து பேசியதைஅருகிலிருந்து செவியுற்றேன்.''

''அப்படியா! நல்லது! இப்போது நான் சொல்வதையும் நன்கு காதில் வாங்கிக்கொள்! விஜயாலயன் தனக்கும் அதன் மூலம் சோழ வள நாட்டுக்கும் ஏற்பட்ட அவமானத்துக்குப் பழிவாங்காமல் விட மாட்டான். முன் வைத்த காலைப் பின் வைக்கவும் மாட்டான். இவ்வளவு தூரம் படையெடுத்து வந்த பின் இனி திரும்பிச் சென்றால் என்னைப்பற்றி அனைத்துலகம் என்ன நினைக்கும்! என் படை வீரர்களே என்னைப் பார்த்துச் சிரிக்க மாட்டார்களா?''

''பிரபோ! இந்தப் படை வீரர்களில் பலர் போரில் மடியும்போது அவர்கள் மனைவியர் அழமாட்டார்களா?''

''உரலில் தலையைக் கொடுத்த பின் உலக்கைக்குப் பயந்தால் ஆகுமா? வீரனுக்கு மாலையிடத் துணிந்தவள் விதவைக் கோலத்துக்கு அஞ்சுவதில்லை!''

''யுத்தம் செய்வதெனில் ஒரு முகாந்திரம் வேண்டாமா? அவள் உங்களை நிராகரித்தது கூடத் தவறில்லை; ஏளனமாய்ச் சிரித்ததுதான் தவறு. அதற்குப் பழிவாங்க நீங்கள் துடிக்கலாம். ஆனால் அவள் இப்போது தான் செய்தது பிசகு என்று உணர்ந்து விட்ட பிறகு...''

''ஜெயசிங்கா! நான் உத்தமசீலியை அடைவதற்காக மட்டும் படையெடுக்கவில்லை. அவள் ஆணவத்தை ஒரு காரணமாக்கித் தஞ்சையைக் கைப்பற்றி அதனைச் சோழ நாட்டின் புதிய தலைநகராக்கி அங்கிருந்தபடி மேன்மேலும் சோழ தேசத்தின் நிலப் பரப்பை விசாலித்துப் பாரம்பரியப் பெருமையுடன் கூடிய ஒரு பேரரசை நிறுவப் போகிறேன்!''

''பிரபோ!....''

''இதோ பார்! நீயாக இருப்பதால் இவ்வளவு தூரம் விளக்குகிறேன். வேறு ஒருவராயிருந்தால் என் படையெடுப்புக்கு இடையூறு செய்யும் எதிரியாகக் கருதி வெட்டிச் சாய்த்திருப்பேன்!''

''இளவரசே!....''

''நண்பா! இதையும் கேள்! தஞ்சையில் உன்னிடம் விடைபெற்றுப் பிரிந்த நான் பழையாறை திரும்பியதும், என் தந்தை இருதய நோயுற்றுப் படுத்த படுக்கையாயிருக்கிறார் என்று அறிந்து உடனே அவரைக் காணச் சென்றேன். அப்போதே அவர் என்னிடம் ஒரு வாக்குறுதி பெற்றுக் கொண்டார். என்ன தெரியுமா? 'காலன் என்னை எப்போது கொண்டு போவானோ தெரியாது; என்னைப் பற்றிக் கவலைப்படாதே; வெண்ணெய் திரண்டு வரும் சமயத்தில் தாழி உடைந்த கதையாகி விடக் கூடாது. எத்தனையோ ரகசிய முன்னேற்பாடுகளைச் செய்திருக்கும் நீ, எந்தக் காரணத்தை முன்னிட்டும் தஞ்சைப் படையெடுப்பை ஒத்திப் போடக் கூடாது. நானே இறந்து விட்டதாகச் செய்தி கிடைத்தாலும் ஈமச் சடங்குகளைச் செய்வதற்காகக் கூடத் திரும்பி வரக் கூடாது. யார் என்ன சொன்னாலும் எதுவுமே உன் லட்சியத்தைக் கைவிடக் காரணமாகக் கூடாது!'

''இந்த வரத்தைத்தான் என்னிடம் கேட்டார். நானும், 'அப்பா! நீங்களே தஞ்

பாரதிதாசன் புதுவையில் தன் இல்லத்துக்கு வரும் இளைஞர்களிடம் பாரதியின் பாடல்களை உற்சாகமாகப் பாடிக் காண்பிப்பார். ''பாரதியார் எப்படி இருப்பார்?'' என்று யாராவது கேட்டால், ''ரவி வர்மா எழுதிய பரமசிவன் — பார்வதி படத்தைப் பார்த்திருக்கிறீர்களா? அதில் பரமசிவன் மீசையுடன் கம்பீரமாக வீற்றிருப்பது போல் பாரதியார் மிடுக்குடன் கம்பீரமாக இருப்பார்!'' என்று வர்ணிப்பது பாரதிதாசன் வழக்கமாம்.

—பாரிசில் நடைபெறும் பாரதி விழாவுக்குப் பயணமானபோது எஸ்.ஆர்.சுப்பிரமணியம் கூறிய தகவல்.

— என். எஸ். மூர்த்தி



சைக்கு வந்து மகுடாபிஷேகம் செய்து கொள்ளத்தான் போகிறீர்கள்' என்று நம்பிக்கையுடன் சொன்னாலும் அவர் கேட்டபடி சத்தியம் செய்து கொடுத்து விட்டுத்தான் நகர்ந்தேன்.

''இப்போது சொல்! தந்தையின் மரணமே என்னைத் தடுத்து நிறுத்தாது என்னும் போது உத்தமசீலியின் மனமாற்றமும் அதையொட்டிய உனது அசட்டுக் கோரிக்கையும் என்னைப் பின்வாங்கச் செய்யுமா?''

''இளவரசே! இனி நான் வாதாடிப் பயனில்லை என்பது தெளிவு. நான் வருகிறேன்'' என்று விசனத்துடன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு தன் குதிரையை நோக்கி நடந்தான் ஜெயசிங்கன்.

''நில்!'' என்று அதட்டினான் ஆகவமல்லன். ''இளவரசர் அனுமதி இன்றி நீ எப்படித் திரும்பிப் போகத் துணிந்தாய்?''

''போகட்டும் விடு'' என்றான் விஜயாலயன்.

''பிரபோ! இவன் திரும்பிப் போய் நாம் பெரும் படையுடன் முன்னேறி வருவதை உத்தமசீலிக்கும் திவாகரனுக்கும் உணர்த்தி விடுவான். இவனைக் கைது செய்ய அனுமதி கொடுங்கள்!''

''வேண்டாம். என் ஆருயிர் நண்பனை, எனக்கு எவ்வளவோ உதவிகள் செய்தவனைச் சிறைப்படுத்த எனக்கு மனமில்லை. மேலும் அவன் உள்ளம் இரு வித பந்த பாசங்களுக்கு இடையில் சிக்கித் தவிப்பதை என்னால் உணர முடிகிறது. தன் உடல் பொருள் ஆவி அனைத்தும் நான் போட்ட பிச்சை என்பதை உணர்ந்திருக்கும் அதே வேளையில் தன் வாணிபம் ஓங்கி வளர்ந்தது முத்தரையர் ஆட்சியின் கீழ் உள்ள தஞ்சையில்தானே என்றும் அவன் மனம் இடித்துரைப்பதால் தடுமாறுகிறான்.'' விஜயாலயன் கூறி முடிப்பதற்குள் ஜெயசிங்கன் வெகு தூரம் சென்று விட்டிருந்தான்.

''இவன் அவர்களை எச்சரிக்காமல் இருப்பானா இளவரசே?''

''அதற்காகத்தானே அவசரமாகத் திரும்புகிறேன் ஆகவமல்லா! ஆனால் இவன் போய்ச் சொல்லி திவாகரன் எதிர் நடவடிக்கை எடுப்பதற்குள் நாமே தஞ்சை சென்றடைந்து விடலாம். இன்னும் அரைக் காதம்தானே! புறப்படு!''

பரணி மீது பாய்ந்து ஏறிய விஜயாலயன் படைகளுக்குத், துரிதமாக முன்னேறச் சமிக்ஞை காட்டிவிட்டுப் புரவியைத் தட்டி விட்டான்.

தஞ்சையை அவர்கள் நெருங்கியபோது கோட்டைக் கதவுகள் அவசரம் அவசரமாக மூடப்படுவதைக் கண்டார்கள். கோட்டைக் காவலர்கள் ஒருவரை ஒருவர் உரத்த குரலெடுத்து அதிகாரம் செய்து கொண்டிருப்பதைக் கேட்கவும் முடிந்தது. பெரும் பரபரப்புஉள்ளே நிலவுவதை ஊகித்தனர்.

''பிரபோ! தாக்குதலை உடனே தொடங்குவதா, அல்லது படைகளுக்குச் சற்று ஓய்வளிப்பதா?'' என்று கேட்டான் ஆகவமல்லன்.

''இதற்குள் சந்திரலேகைக்குத் தூதன் பறந்திருப்பான். இரவோடு இரவாக முத்தரையனும் தன் படைகளுடன் கிளம்பி விடுவான். அவன் வந்து விட்டால் நாம் அவனை எதிர்ப்பதா அல்லது கோட்டையைத் தாக்குவதா?'' பதிலுக்கு ஒரு கேள்வி தொடுத்தான் விஜயாலயன்.

''முத்தரையன் வரு முன்னர் தஞ்சையைக் கைப்பற்றி உள்ளிருந்து கொண்டு பாதுகாப்புடன் முத்தரையனை எதிர்ப்பதுதான் சிறந்த போர்த் தந்திரமாக இருக்கும்.''

''அவ்வாறெனில் தாமதம், ஓய்வு என்ற பேச்சுக்கு இடமேது?''

படைகளை வியூகம் வகுப்பதில் கவனம் செலுத்தினான் ஆகவமல்லன்.

சீனனை அழைத்தான் விஜயாலயன். ''உன் பணி மிக முக்கியமானது. கோட்டைக்குள் நம் வீரர் புகுந்ததும் நீ வேறு எதையும் லட்சியம் செய்யாமல் நேரே அரச மாளிகைக்குச் செல். உத்தமசீலிக்கு ஒரு தீங்கும் நேராமல் பாதுகாத்து என்னிடம் சேர்ப்பித்துவிடு. புரிந்ததா? நான் என் வீரர்களை விட்டு விட்டு அவளைத் தேடி வர முடியாது!''

புரிந்து கொண்டதற்கு அடையாளமாக வணங்கி நிமிர்ந்தான் சீனன்.

இந்தச் சமயத்தில் கோட்டை மதிலுக்கு மேல் வேல் முனையில் செருகப்பட்ட ஒரு தலை உயர்வது சிலர் கண்ணில் பட, ''அதோ! அதோ!'' என்று ஒருவருக்கொருவர் சுட்டிக் காட்டிப் பேசிக் கொள்வது விஜயாலயன் செவிகளைத் தாக்கியது. அவனும் சிரத்தைத் திருப்பி அந்தத் திக்கில் பார்த்தான். தாங்க முடியாத அருவருப்பும் சொல்லி முடியாத துக்கமும் ஒருங்கேஉண்டாக அவனுக்கு வயிற்றில் சங்கடமேற்பட்டது. (தொடரும்)

மிகச் சிறந்த சங்கீத வித்வான்களைக் குருமார்களாகப் பெறும் பாக்கியம் செய்த வோலேட்டி வெங்கடேஸ்வரலு, தாம் வித்வானாக உருப்பெறும் காலத்தில் கர்நாடக சங்கீதத்தில் மட்டுமின்றி ஹிந்துஸ்தானி இசையிலும் ஆர்வம் கொண்டு மேதைகளின் கச்சேரிகள் பலவற்றைக் கேட்டு இரு இசைப் பாணிகளிலும் உள்ள சிறந்த அம்சங்களை ரசித்துக்கொண்டார். அகில இந்திய ரேடியோவில் வெள்ளி விழாக் காலத்துக்கு அதிகமாகப் பணியாற்றி இன்று இசை நிகழ்ச்சித் தயாரிப்பாளராக விளங்குகிறார். அழுத்தமான, கணீரென்ற சாரீர வசதி படைத்த வோலேட்டி சம்பிரதாய சுத்தம் காத்துத் தமக்கென்று தனிப்பாணி வகுத்துக் கொண்டவர். இவர் கச்சேரியைக் கேட்கும் போது சிரமப்படாமல் இலகுவாகப் பாடுவது போல் ஒரு பிரமை ஏற்படும்; அழகுணர்வுடன் கூடிய நுணுக்கமான கலைப்பாண்மையும் கற்பனை வளமும் பளிச்சிடும். ஏற்கெனவே ஆந்திராவிலும் பம்பாயிலும் பல சபாக்களால் கௌரவிக்கப்பட்டுள்ள வோலேட்டி அவர்களை இந்த ஆண்டு சென்னை கிருஷ்ண கான சபை "சங்கீத சூடாமணி" விருது வழங்கிப் பாராட்டுகிறது.

அவரது அசாதாரண ஆற்றல் ஒருபுறம் இருக்க, அவரது உயர்ந்த பண்பாட்டை விளக்க ஒரு சம்பவத்தை நினைவு கூர்கிறார் வயலின் வித்வானும் பாடகியுமான ஸ்ரீமதி டி. ருக்மிணி:

# ஆற்றலுடன் இணைந்த அடக்கம்



சுமார் பதினைந்து வருஷங்களுக்கு முன் கிருஷ்ண கான சபாவின் கோகுலாஷ்டமி சங்கீத வரிசையில் ஒரு மாலைக் கச்சேரியில் பாடகர் ஒருவர் சாரீர வளத்துடன், கேட்க சுகமாகப் பாடிக் கொண்டிருந்தார். 'ஆஹா, இவருக்கு வயலின் வாசிக்கச் சொன்னால் எத்தனை சந்தோஷமாக இருக்கும்!' என்று மனசுக்குள் நினைத்துக் கொண்டேன். பாடகர்: திரு வோலேட்டி வெங்கடேசுவரலு.

சொன்னால் நம்ப மாட்டீர்கள்: அடுத்த வருஷ கோகுலாஷ்டமி சீசனில், அதே கிருஷ்ணகான சபா செயலாளர் திரு யக்ஞராமன் என்னிடம் வந்து, ''நீங்கள் தான் இந்தத் தடவை வோலேட்டி அவர்களுக்கு வயலின் வாசிக்க வேண்டும்'' என்று சொன்னபோது எனக்கு வியப்பு ஒருபுறம்; மகிழ்ச்சி ஒருபுறம். நினைத்தது நடந்ததே என்று வியப்பு. வோலேட்டி அவர்கள் இளம் வித்வானாகிய நான் வாசிக்கப் பெருந்தன்மையுடன் ஒப்புக்கொண்டதில் மகிழ்ச்சி.



ஒரு முறை டிசம்பர் சீசனில் வோலேட்டி அவர்களுக்கு வயலின் வாசித்த பொழுது, ராகம் — தானம் — பல்லவியின்போது, ஸ்வரம் ராகமாலிகையாகப் பாடினார். அவர் பாடும் அதே ராகத்தை வயலினில் வழங்குவதை விடக் கிட்டத்தட்ட அதேபோலுள்ள வேறு ராகத்தை வாசித்தால் நன்றாயிருக்குமே என்று திடீரென்று எனக்குத் தோன்றிற்று. அவரிடம் மேடையிலேயே அனுமதி கேட்கவும் இயலவில்லை. அவர் கானடா பாடினால், நான் சஹானா வாசித்தேன். அவர் த்விஜாவந்தி பாடினால் நான் பாகேஸ்ரீ வாசித்தேன். ரசிகர்கள் வெகு உற்சாகத்துடன் கைதட்டி ரசித்தார்கள். கச்சேரி முடிந்தபிறகு அவரும் அவசரமாகப் புறப்பட, நான் இதுபற்றி அவரிடம் ஏதும் பேச முடியாமல் போயிற்று. ஆனால் மறு நாளே, அவர் அனுமதியின்றி அப்படி வாசித்ததற்கு மன்னிப்புக் கோருகிற மாதிரி அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன். என்ன பதில் எழுதினார் தெரியுமோ?

''நீங்கள் என்ன தவறு செய்துவிட்டீர்கள் மன்னிப்புக் கேட்க? அன்றைக்கு எத்தனை அருமையாக வாசித்தீர்கள்! எல்லா ராகங்களும் உங்கள் வாசிப்பில் எத்தனை அழகாக அமைந்தன! நீங்கள் அன்று எனக்கு வயலின் வாசித்ததில் உண்மையாகவே மகிழ்ச்சியடைந்தேன். அதற்கு நான் உங்களை மனமாரப் பாராட்ட அல்லவா வேண்டும்!'' என்று மிகப் பெருந்தன்மையுடன் பதில் எழுதினார்.

வோலேட்டி அவர்கள் ஒரு கனவான். பரந்த மனம் படைத்தவர். பணிவு மிக்கவர். ஆர்ப்பாட்டம், அலட்டல் எதுவும் இவரிடம் கிடையாது.

- பேட்டி: சாருகேசி



"இந்திரா காங்கிரஸ் இல்லாத நாடு இதயம் இல்லா எறும்புக் கூடு."
"ஊழல் இல்லா நாடும் இல்லை உண்மை பேசும் பிரதமரும் இல்லை."
"விலைவாசி உயர்ந்து விட்டால் ஜனதாவைக் கேளு."
"கூலி உயர்வு கேட்டால் பாகிஸ்தான் படையெடுக்கும்."

-புதுமொழிகள் என்னும் தலைப்பில் 'பல்லவநாதம்' என்னும் பத்திரிகை மேலட்டையில் இப்படி அச்சிட்டிருக்கிறது.

## 22

தன்னுடைய மிரட்டலை வட்சியம் செய்யாமல், ஹில்டா தனக்குத் தானே விதித்துக் கொண்டு விட்ட ஓர் இலட்சிய வட்டத்தைப் பற்றிக்கொண்டு திருநெல்வேலி சென்றுவிட்டாள் என்று அறிந்தபோது குப்புசாமிக்குச் சப்பென்று போய்விட்டது. நிதானமாகச் சிந்தித்துப் பார்த்த வேளையில் பணத்துக்காகத் தான் செய்து வந்திருக்கும் பாவ காரியங்கள் அவர் மனத்தில் பேரிரைச்சல் போடத் துவங்கின. முரளீதரன் வேலையை ராஜினாமா செய்தது, ஹிரண்மயி ராம் நாராயணனுடன் வெகு நெருக்கமாக நீண்ட காலம் தொடர்பு வைத்துக்கொண்டு பழக்கப் பட்டவள் போல் நடந்து கொண்ட தோரணை இவை மேலும் அவரை அயரடித்தன. ஹிரண்மயினுடைய செல்வாக்கு நாளுக்கு நாள் மேலோங்குவதையும் அவர் கவனிக்கத் தவறவில்லை.

ஜாடையாக அவளிடத்தில் பேச்சுக் கொடுத்துப் பார்க்கலாமென்றாலோ அவள் இவரைச் சட்டை செய்யாமல் போனது மல்லாமல், கேவலம் ஒரு சொறி நாயைக் கண்டால் விலகிச் செல்வதைப் போன்று, முகத்தை மிக அருவருப்பாக வைத்துக் கொண்டாள். அவளிடம் நெருங்கிப் பேசவே குப்புசாமிக்குப் பயமாக இருந்தது.

அன்று மதியம் மணி மூன்று இருக்கும். ராம்நாராயணன் அவரைக் கூப்பிடுவதாக பியூன் சொன்னான். எதற்காகவோ என்று யோசித்த வண்ணம் அவர் உள்ளே சென்றார். அங்கே ராம்நாராயணனுக்கு எதிராகக் கால் மேல் கால் போட்டபடி மிக அட்டகாசமாக ஹிரண்மயி உட்கார்ந்திருந்தாள். பொதுவாகத் தன்னைக் கூப்பிட்டனுப்பி முதலாளி பேசும்பொழுதெல்லாம் மூன்றாவது நபர் இல்லாது இருப்பதுதான் வழக்கம் என்று குப்புசாமிக்குத் தெரியும். ஆனால் இன்று தான் உள்ளே நுழைந்த பிறகும்கூட முதலாளி அந்தப் பெண்ணை வெளியே அனுப்பாதது அவருக்கு வியப்பை அளித்தது.

'உட்காரும்' என்று வழக்கமாகச் சொல்பவர் அப்படிச் சொல்லவில்லை. மாறாகத் தான் வந்ததைக் கவனிக்காதவர் போல்

# கவர்ச்சிகள்

— கிருஷ்ணமணி —

குஜராத்தில் ஒரு தேர்வுக்காக ஆஜரான 140 மாணவர்களை, 'மகாத்மா காந்தி யார்?' என்று கேட்டபோது விழித்தார்களாம். சிலர் புத்திசாலித்தனமாகப் பதில் சொல்லியிருக்கிறார்கள். ''அவர் தான் இந்தியாவை உருவாக்கியவர்'', ''நான் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டதே இல்லையே'' என்றெல்லாம் பதில் வந்திருக்கிறது. இவர்களெல்லாம் வர்த்தக நிர்வாகத் தேர்வுக்காக ஆஜரானவர்கள்.



ராம்நாராயணன் அந்தப் பெண்ணிடம் பேசிக் கொண்டிருந்தது குப்புசாமிக்கு உறுத்தியது. குளிர் சாதனம் பொருத்தப்பட்டிருந்த அந்த அறையின் குளுமை போய் அவருக்கு உடம்பில் உஷ்ணம் ஏறுவதைப் போலிருந்தது.

தொண்டையை ஒருதரம் செருமிக் காட்டினார். திரும்பிய முதலாளி 'குப்புசாமியா! வெரி குட். செலவழிச்சது போக ஐயாயிரத்திலே மீதி எவ்வளவு இருக்கு?' என்றார் எடுத்த எடுப்பிலேயே.

குப்புசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. இதுநாள்வரை இம்மாதிரியான விஷயங்களுக்குத் தந்திருக்கும் பணத்துக்குக் கணக்குக் கேட்காத முதலாளி இன்று கேட்கிறாரென்றால், ஹில்டா எப்படி சென்னையிலிருந்து போனாள் என்ற விவரம் தெரிந்திருக்க வேண்டும்.

''ம்... வந்து....''

''நீர் சொல்ல வேண்டாம். நான் சொல்றேன். மிஞ்சிப் போனால் இருபத்தஞ்சு ரூபாய் செலவழிச்சிருப்பீர். பாக்கிப் பணத்தைத் திருப்பிக் கொடுத்திடும். உம்முடைய முயற்சி இல்லாமலேயே ஹில்டா ஜான்ஸன் தானாகவே திருநெல்வேலி போயிருக்கா. அவள் ரோசக்காரி. நீர் அவளைக் கண்டபடி பேசியிருக்க வேணும். போலீஸ்லே அவ உம்மைப் பத்தி ரிப்போர்ட் பண்ணியிருக்காளாம். நாளைக்கே உம்மை போலீஸ் தேடிண்டு வரலாம். அப்போ அவாகிட்டே என்ன சொல்லப் போறீர்? பதினைஞ்சு வருஷமா யாருடைய உப்பைத் தின்னு இந்த ஜீவிதத்தை நடத்திண்டு வரீரோ அந்த முதலாளியான என்னைக் காண்பிச்சுக் கொடுத்திடுவீரா? இல்லே வேறேதானும் சொல்லிச் சரிக்கட்டிப்பிடுவீரோ? சுரேஷ் பெங்களூர் போயிட்டான். நானும் ஹிரண்மயியும் இன்னிக்கு ஈவினிங் ஃப்ளைட்லே பாம்பே போறோம். திமர்னு புரோகிராம் கொடுத்திட்டான் ஸேட்டு. நான் திரும்பி வர நாலஞ்சு நாளாகும். பணம் எங்கே? செலவுக்கு வேணும். வீட்டிலே வச்சுட்டு வந்திட்டீரோ? கம்பெனி காரிலே போய் எடுத்துண்டு வந்துடும்....''

''முதலாளி....!''

''எந்தச் சாக்கும் சொல்லப்படாது. நீர் ஒன்னரை லட்ச ரூபாய்லே வீடு கட்டியிருக்கீர். உமக்கு நான் எவ்வளவோ செய்தாச்சு. இனியும் எங்கிட்ட அதிகமாக எதிர்பார்க்




**நேயர் தொடுத்த சவால்!**

# ஆடம்பரம்

கல்கி காரியாலயத்திலிருந்து எனக்கு அனுப்பப்பட்டு வந்த வாசகர்களின் கடிதங்களில் ''ஆடம்பரம்'' என்ற தலைப்பைத் தேர்ந்தெடுத்தேன்.

இந்தத் தலைப்புக்கு ஏற்றவாறு படம் எடுக்க விரும்பி திருமதி நித்யகல்யாணியை அணுகினேன். அவரோ ''நான் எப்பவும் சிம்பிளாக இருப்பவள்; என்னைப் போய் ஆடம்பரமாகப் போஸ் கொடுக்கச் சொல்கிறீர்களே'' என்றார்.

''நடிப்புத்தானே? நீங்களே அரங்கேறி எத்தனையோ நடன நிகழ்ச்சிகளை நடத்தியிருக்கிறீர்கள். அப்போ சில சமயம் நாயகி பாவத்தில் அலங்காரம் செய்து கொள்வது போல் அபிநயிப்பதில்லையா?'' என்று கேட்டேன்.

உடனே அவர் மகிழ்ச்சியோடு சம்மதித்தார். விளைவு: இவ்வாரக் கல்கி மேலட்டைப் படம்.

**- எம். கே. ராமமூர்த்தி**

'ஆடம்பரம்' என்ற தலைப்பை எழுதி ரூ. 10 பரிசு பெறும் கல்கி வாசகர்:

எஸ். ஜி. சேகர்,
136, என். ஜி. தெரு.
பெரியபேட்டை,
வாணியம்பாடி 635751.

காதேயும். கடந்த காலத்திலே உம்ம யோசனையினாலே நானும் பல பாவ காரியங்களைத் தைரியமா செஞ்சிருக்கேன். எதுக்கும் ஒரு லிமிட் வேணும். இதோ இந்தப் பெண் என் மனசை மாத்திட்டா. இனிமே இவ கிட்டத்தான் நான் எதுக்கும் கன்ஸல்ட் பண்ணப் போறேன். இவ தன்னோட எதிர்கால வாழ்க்கையையே என் கம்பெனியோட வளர்ச்சிக்காகத் தியாகம் செஞ்சிருக்கா. பம்பாய் ஸேட்டோட பிஸினஸ்லே வர்ற இலாபத்திலே இவளுக்கு ஒரு பங்கு தரப்போறேன். இப்போ இவளை வச்சுத்தான் அதை பைனலைஸ் பண்ணணும். இவ அந்த ஸேட் கிட்டே நான் இவளை ஏமாத்தறதாச் சொல்லிட்டான்னு அவன் பிஸினஸைத் தரமாட்டேன்னு சொன்னாலும் சொல்லுவான். அதனாலே இவளை நான் விரோதிச்சிக்க முடியாது. புரியுதா? சீக்கிரமா இன்னும் ஒரு மணி அவகாசத்துக்குள்ளே நாலாயிரத்து தொளாயிரத்து எழுபத்தைஞ்சு ரூபாயோடு வந்து என்னை மீட் பண்ணணும். நீர் போகலாம்..''

குப்புசாமிக்குக் கை கால் நடுங்க ஆரம்பித்தது. வாய் உலர்ந்து விட்டது போல் தோன்றியது. குப்பென்று வியர்த்தது. தான் எத்தகைய இக்கட்டில் மாட்டிக் கொண்டு விட்டோம் என்பது புரிந்தது. போலீஸ்காரர்கள் தன் வீட்டுக்கு வந்தால் என்ன பதில் சொல்வது? தன்னைக் காப்பாற்றுவதில் சிறிதும் அக்கறை இல்லாதவர் போல் பேசிவிட்ட ராம்நாராயணன் உண்மையிலேயே பம்பாய்தான் போகிறாரா இல்லை, தர்மசங்கடமான நிலையைத் தவிர்க்க மேற்கொள்ளும் உபாயமா? தன்னால் இனி அவருக்கு எந்த வித உபயோகமுமில்லை என்ற முடிவுக்கு வந்து விட்டவர் போல அல்லவா பேசிவிட்டார். இந்தப் பெங்காலிக்காரி இவரைக் கைக்குள் போட்டுக் கொண்டு விட்டாளே. இவளை முரளீதரனிடமிருந்து பிரித்ததற்குப் பழி வாங்குகிறாளா? என்ன சனியனடா இது. பெண்களைப் பழுது என்று மிதிக்க முடியாது பாம்பு என்று தாண்ட முடியாது. இத்தனை ஆண்டு காலமாகத் தன்னுடைய அந்தரங்கங்களை நம்முடன் பங்கிட்டுக் கொண்ட இந்த ராம் நாராயணனுக்கு இப்போது திடீர் என்று என்ன வந்து விட்டது? ஒரு நிமிடத்தில் என்னைக் கத்தரித்து விட்டாரே! எனக்கும் இம்மாதிரி ஒரு நிலை என்றாவது ஒரு நாள் வரலாம் என்று ஏன் தோன்றாமலேயே போய் விட்டது. ரூபாயைக் கொண்டு வந்து தர வேண்டும் என்கிறார். இல்லாவிட்டால் என்ன செய்து விடுவார்?

''ஓய் குப்புசாமி! ரூபாய் சீக்கிரம் வரட்டும். இல்லேன்னா நானும் போலீசுக்குக் கம்ப்ளெய்ன்ட் தரும்படி ஆகிவிடும்!''

பளார் என்று யாரோ தன்னைக் கன்னத்தில் அறைந்தது போலிருந்தது குப்புசாமிக்கு.

சுதாரித்துக் கொள்ளச் சில நிமிடங்கள் பிடித்தன. தம்முடைய கெட்டிக்காரத்தனம் தம்மை விட்டுப் போய்விடவில்லை யென்று சமாதானம் சொல்லிக் கொண்டார். தைரியத்தை யெல்லாம் ஒன்று திரட்டிப் பதில் சொன்னார்:

''முதலாளிக்கு இதுநாள் வரைக்கும் என் சரீரத்தைச் செருப்பாய்த் தைச்சுப் போட்டு உழைச்சிருக்கேன். இப்போ திடீர்னு என்மேலே அவநம்பிக்கை ஏற்பட்டாற் போலப் பேசறேள். நான் ரூபாயைத் திருப்பித் தரலேன்னா போலீசுக்குப் புகார் கொடுத்திடறதாப் பயமுறுத்தறேள். நானும் உங்க ஜில்லாக்காரன்தான். உம்மோட வளர்ச்சிக்காகப் பல பாவ காரியங்களைப் பண்ணியிருக்கேன். இப்போ குஸ்தி மைதானத்திலே 'பீட்'டாகி நிக்கிற பயில்வானை ஜயிச்சவன் பார்க்கிற பார்வை மாதிரி உங்க பார்வை இருக்கு. தோத்துப் போனவனுக்கும் அந்தக்கலையோட நுணுக்கங்கள் தெரியும்

றதை ஜெயிச்சவன் மறந்திடறது இல்லே. ஏதோ சில பிசகுகளால் தோத்துட்டான் றதும் ஜெயிச்சவனுக்குத் தெரியும். நான் தோத்துப் போயிட்டதா நீங்க நினைக்கிறது தப்பு. இதிலே நான் ரெபரியாகத்தான் இருந்திருக்கேன். ஃபவுல் கேம் ஆடி ஜெயிச்சது நீங்க. அதுக்கு லஞ்சம் வாங்கிண்டு விக்டரி டிக்ளேர் பண்ணின தப்புத்தான் இப்போ என் மேலே இருக்கிற சுமை. அதை எப்படி இறக்கி வைக்கிறது என்கிறது எனக்குத் தெரியும்.''

''அப்படின்னு பணத்தைத் திருப்பித் தர முடியாதுங்கறீரோ?''

''அதை உங்க பர்ஸனல் அக்கௌண்ட்லே தான் டிராப் பண்ணி யிருக்கு!''

''அதனுலே ரிப்போர்ட் பண்றது சுலபம். அதுக்கான அத்தாட்சி வாங்கிண்டிருக்கிரோ?''

''இதுநாள்வரைக்கும் அத்தாட்சி வாங்கிக்கலேயே?''

''ஓஹோ! அப்போ அந்த ஐயாயிரமும் ஸ்வாஹா என்று எடுத்துக்கணுமோ?''

மௌனம்.

''உம்மைத்தான் ஓய் கேக்கறேன்.''

''எனக்கு ஒரு தடவை வாங்கிண்ட பணத்தைத் திருப்பித் தர வழக்கம் கிடையாது!''

''சந்தி சிரிக்கடும்! ஜாக்கிரதை!''

''பார்த்துடலாம் அதையும்தான்!''

''சவால் விடுறீரோ?''

''இல்லே. உங்க சவாலே ஏத்துக்கறேன்.''

''குப்புசாமி வீணு ஜெயில் கம்பிகளை எண்ணறதுக்காகத் தயார் பண்ணிக்காதேயும்!''

''எனக்குப் பக்கத்திலேயே உங்களுக்கும் இடம் ஒதுக்க ஏற்பாடு பண்ணிட்டுத்தான் போறதா இருந்தாலும் போவேன்.''

''சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு நடக்கணுமய்யா!''

''இதோ பாரும்! நீரும் நானும் நம்ம பேச்சு நடுவே சத்தியம், தர்மம் என்கிற வார்த்தைகளையே இழுக்கக் கூடாது. அது யோக்கியமா, நாணயமா வாழறவுளே அவாளுக்குன்னு ஏற்பட்ட வார்த்தைகள். நாம ரெண்டு பேரும் சூது, வாது, பொய், புரட்டு இப்படியே காலத்தைக் கழிச்சிட்டோம். நீரும் உம்ம முன்னேற்றத்துக்காக எத்தனையோ பேரைக் கருவேப்பிலை மாதிரி பயன்படுத்திண்டீர். நான் உம்மைப் பயன் படுத்திண்டேன். நீர் பல லட்சம் சம்பாதிச்சிட்டீர். நான் ரெண்டு லட்சம்தான் சம்பாதிச்சிருக்கேன். சந்தி சிரிக்கிறதுன்னு வந்தா உம்ம பாடுதான் ரொம்ப சங்கடமாய்ப் போயிடும். இதோ இந்தப் பொண்ணு உம்மோட நல்லதுக்குன்னு யோசனை சொல்லலே. அடியோடு நாசம் பண்ணத்தான் கங்கணம் கட்டிண்டு இருக்கா. ஹில்டா ஜான்சனைப் போல இவ பசு இல்லே. பசுத் தோல் போர்த்த புலி. நரியோட வஞ்சகமும், புலியோட வெஞ்சினமும் இவகிட்டே ஒண்ணுக் கலந்திருக்கு. அடிபட்ட புலி சமயம் பார்த்துத் தாக்குமாம். இவ சமயம் பார்த்துக்கிட்டிருக்கா. உம்மை நிர்த்தூளி படுத்திட்டுத்தான் போவா! நான் ரூபாயைத் திருப்பித் தர முடியாது. என் கணக்கை ஸெட்டில் பண்ணிடும். ராஜிநாமாக் கொடுத்திடறேன். அதிலே கொஞ்சமும் குறையக் கூடாது. கிராஜுவிடி, பிடிப்புப் பணம் எல்லாம் ஒழுங்கா வந்தாகணும். இல்லேன்னு உம்மோட பல ரகசியங்களை வெட்ட வெளிச்சமாக்கிடுவேன். ஜாக்கிரதை!'' உறுமிவிட்டுக் குப்புசாமி வெளியேறினர்.

ராமநாராயணன் முகத்தில் வியர்வை குப்பென்று அரும்பியது. ஒன்றுமே நடக்காதது போல் ஹிரண்மயி தன் கை விரல் நகங்களின் அழகை ரசித்துக்கொண்டிருந்தாள்.

(தொடரும்)



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1982

**பிரசுரத்துக்கு ஏற்கப்பட்ட சிறுகதைகள் :**

1. உயிர் — எஸ். சகுபர் ஷாதிக்
2. இவர்கள் இந்நாட்டு மன்னர்கள் —கிருஷ்ண குரு
3. இன்னும் என்ன தாமதமடி —''நினைவுகள்'' வசந்தி
4. நீ வருவாயென... — ரோஹிணி
5. இது வேறு பாதை — மார்ஷல்
6. எக்ஸ் சமன் ஸீரோ — ஏ.ஏ. ஹெச். கே. கோரி
7. குழந்தை பெற்றுக்கொள்ள ஒரு பெர்மிட் — டி. நாராயணமூர்த்தி (அறிமுக எழுத்தாளர்.)
8. முள் மர நிழல்கள் — சித்ரா ராமச் சந்திரன்
9. சமுதாய அந்தஸ்து — கோவி. ஜெய ராமன் (ஜெரா)
10. ரோஷங்கள் — அர. நாகராஜன்
11. யார் வீட்டுப் பிணம்? — மெ. மெய் யப்பன்.
12. பொதி மாடு — அன்னம்
13. சந்தேகத்துக்கு அப்பால் — கோமகள்
14. நாற்றங்களும் மணங்களும் — கல்கி தாசன்
15. குயிலம்மா — ஞா. செல்வராசன் (அறிமுக எழுத்தாளர்)
16. தெய்வாம்சம் —பொன்னித்துறைவன்
17. இரக்கம் — நந்தினி
18. நான் எங்கே, அவன் எங்கே! — ஜே.

''யார் தேவாரம் பாடவில்லை?''
''லோயர்'' (பாடினவர் அப்பர்)



# நீங்கள் கேட்டவை:

⌘ சத்திய நாராயணன், அயன்புரம்

? **வாழ்க்கையில் நீங்கள் செய்த பெரிய தவறு என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?**

! நேர்ந்துவிடும் ஒவ்வொரு தவறையுமே பெரிதாக எண்ணி மனம் சோர்கிற வர்க்கம் நான். உதாரணமாகப் போன வாரம் களஞ்சேரி அன்பர் வைத்தியநாதன், 'அரசியல்வாதியும் இலட்சியவாதியும் எந்த விதத்தில் ஒன்றாக இணைந்து செயல்படுகிறார்கள்?' என்று கேட்டிருந்தார். 'இலட்சியவாதி' என்பது 'இலக்கியவாதி' என்று அச்சாகி விட்டதால் பதிலும் அபத்தமாகப் போய்விட்டது! மன்னிக்கவும். அதற்குப் பரிகாரமாக இதோ களஞ்சேரி வைத்தியநாதனின் இன்னொரு கேள்வி:

⌘ வைத்தியநாதன், களஞ்சேரி

? **ஒருவன் தன் வாழ்நாளில் எதை அனுபவித்தே ஆக வேண்டும்?**

! நல்ல கர்நாடக சங்கீதக் கச்சேரிகளை. அதிகச் செலவின்றி இதில் பெறக்கூடிய சாந்தியும் சௌக்கியமும் சந்தோஷமும் இறையுணர்வும் வேறு எதிலும் கிடைப்பதில்லை என்பது என் அனுபவம். கடைசியாக ரசித்தது மணி கிருஷ்ணசாமியின் மணியான கச்சேரி. அழகர்சாமியும் கந்தசாமியும் பக்க வாத்தியம் வாசித்து ஜமாய்க்க, வளமான சாரீரம் படைத்த மணி, 'நருமோமு'வில்லிலநாதஸ்வரபாணி ஜாலங்களால் சொக்கவைத்து, தோடியில் பிரமிக்கச் செய்து, சாமாவில் (வருவாரோ) உருக்கி விட்டார். வீடு திரும்பி இரண்டு நாளாயிற்று; மனம் இன்னும் அந்த இசையில் இசைந்திருக்கிறது!

⌘ கே. என். செல்வரத்தினம், வடகாடு

? **பிரதமரின் வெளிநாட்டுச் சுற்றுப் பயணத்தால் விளையப்போவது என்ன?**

! இரண்டு 707 விமானங்களை இதற்கென்று ஒதுக்கியதில் ஏற்கெனவே மக்களுக்கு (ஏர்-இந்தியாவுக்கு) இரண்டு கோடி நஷ்டம் விளைந்து விட்டது. குடும்பத்தோடு பிரதமர் செல்வதால் சுற்றுலாச் செலவுகள் கணிசமாகத்தான் இருக்கும். வரி செலுத்துபவன் இவற்றை மகிழ்ச்சியோடு தாங்குவான், பிரதமரின் அமெரிக்க விஜயத்தால் இந்தியாவுக்கு விளையும் நன்மைகள் ஈடு செய்யும் விதத்தில் அமையுமானால்.

⌘ மு. பாஸ்கரன், புதுவை

? **1ரூ 2ரூ நோட்டு ஒழிப்பு தேவைதானா?**

! 1ரூ. நோட்டு அச்சடிக்க ஆகும் செலவு 1 ரூக்கு மேல் ஆகிறது எனில் நாணயங்கள் புழங்க விடுவதுதான் நல்லது. நமது ரூபாயின் மதிப்பு இதிலிருந்தே வெட்ட வெளிச்சம்!

⌘ அ. கல்சுல் ஜமால், திருமங்கலக்குடி

? **ராஜீவ் காந்திக்கு மத்திய மந்திரிசபையில் இடம் கிடைக்கும் போலிருக்கிறதே?**

! அதற்குள் அவசரப்படாதீர்கள்! பதவி ஆசையே இல்லாத அவர் இப்போதுதான் இந்திரா காங்கிரஸ் காரியதரிசி பதவி ஏற்பதில் ஆட்சேபணை இல்லை என்று தெரிவித்திருக்கிறார். போகப் போக மந்திரி பதவி, பிரதமர் பதவிகளை ஏற்க ஆட்சேபணை இல்லை என்று கூறித் தமது பதவி மோகமின்மையை வன்மையாக நிரூபிப்பார்.

⌘ வித்யாசாகர், பங்களூர்

? **கண்ணதாசனிடம் இருந்த தன்னடக்கம் வைரமுத்துவிடம் இல்லையே கவனித்தீர்களா?**

! கவனித்தேன். அவர் கண்ணனின் தாசன்; இவரோ வைரம், முத்து. இதைத்தானே சொல்கிறீர்கள்?

⌘ கனியூர் எழிலி, கோவை

? **நேர்மை எவரிடம் தடுமாறுகிறது?**

! 'பெரியகுளம் உபதேர்தலில் எம்.ஜி.ஆர். விட்டுக் கொடுப்பாரா?' என்று கேட்பவர்களிடம். எம். ஜி. ஆர். அனைவருக்கும்

# எம்.ஜி.ஆர்.

# திராவி

பொதுவாக வைத்த ஒரு கருத்தை மற்ற கட்சிகள் எதுவுமே ஏற்காதபோது எம்.ஜி. ஆர். மட்டும் நாம் சொன்னதைச் செயலில் காட்ட வேண்டும் என்று எதிர்பார்ப்பது நேர்மையே யல்ல.

✖ ஜி. நீலகண்டன், பங்களூர்

? பணக்காரர்கள் கூட கிழிந்த பனியன்களை வேலில் களைந்து எறிய மாட்டேனென்கிறார்களே, என்ன காரணம்?

! பெரியாவரின் சீடர்களே பதவிக்கு வந்து பதினைந்து ஆண்டுகளுக்கு மேலான பிறகும் திராவிடர் கழகம் இன்னமும் பிராமணர் எதிர்ப்புப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கிறதே அதைப் போலத்தான் கிழிந்த பனியன் விஷயமும்!

✖ ஆர். என். செழியன், டோம்பியுலி

? மனிதன் குரங்கிலிருந்துதான் பிறந்தான் என்பது நமது அரசியல்வாதிகளுக்குத் தெரியுமா?

## விட்டுக் கொடுப்பாரா?

சில அரசியல்வாதிகள் அதை ஒப்புக்கொள்வதா யில்லை. சில காலம் முன் விஞ்ஞானிகள் அடங்கிய கூட்டத்தில் "டார்வின் கொள்கையாவது ஒண்ணாவது? எல்லாம் அபத்தம்! மனிதன் குரங்கிலிருந்து பரிணாம வளர்ச்சியில் உருவானான் என்றால் ஏன் இன்றைக்கும் உலகில் குரங்குகள் காணப்படுகின்றன?" என்ற மேதாவித்தனமான கேள்வி கேட்டு அத்தனை விஞ்ஞானிகளுக்கும் அதிரடி தந்தவர்: நமது புதிய ஜனாதிபதி!

✖ வி. குருமூர்த்தி, பாண்டிச்சேரி

? அமரர் வாசனின் லட்சியமென்ன?

! 'மக்களுக்குக் களிப்பூட்டுவதே முதல் லட்சியம்' என்று கூறிக் கொண்டிருந்தவர், 'களிப்பூட்டுவது மட்டுமல்ல கலை; அது மக்கள் மனங்களை உயர்த்தவும் வேண்டும்' என்ற கல்கியின் கொள்கையை ஏற்றபோது உருவான மகத்தான படைப்பு ஔவையார்.

✖ ஜி. ராஜேந்திரன், வேலப்ப நாயகன் வலசு ★

? பத்திரிகைகளின் சர்க்குலேஷன், தரம், லாபம், பாதுகாப்புணர்ச்சி இவற்றில் எதற்குப் பத்திரிகை ஆசிரியர் முக்கியத்துவம் தரவேண்டும்?

! சர்க்குலேஷன் குறைந்து நஷ்டமடையும் அளவு தரத்தைஉயர்த்தினால் அந்தத் தரத்தினால் யாருக்குமே உபயோகமில்லை. அதிக லாபம் எதிர்பார்த்து சர்குலேஷனுக்காகத் தரத்தைக் குறைத்தால் அத்தகைய சர்குலேஷனால் பத்திரிகை முதலாளி தவிர வேறு யாருக்குமே லாபமில்லை.

இரண்டுக்குமிடையில் கத்தி முனையில்

✖ மணியான கச்சேரி!

நர்த்தனமாடுவதுபோல்சாமர்த்தியமாகச் செயல்படும் ஆற்றல்உள்ள ஆசிரியருக்குப் பாதுகாப்பு பற்றிய கவலையே இல்லை! லாபம்: எல்லோருக்கும்!

★ ரூ. 10/- பரிசு பெறுபவர் :

ஜி. ராஜேந்திரன்
வேலப்ப நாயகன் வலசு
பெரியார் மாவட்டம் - 638 111



✖ லட்சியம் என்ன?



✖ விட்டுக் கொடுப்பாரா?



லாப - நஷ்டம் எவ்வளவு?






சென்னை திருவல்லிக்கேணி பெரிய தெருவில் உள்ள பப்ளிக் லைப்ரரி மாதிரி மோசமான லைப்ரரி ஏதாவது இருக்குமா என்பது சந்தேகம். புத்தகங்கள் தாறுமாறாகக் கிழிந்தும் கலைந்தும், மின்சார விசிறிகள் தூசி படிந்தும், பொதுக் கழிப்பிடம் மாதிரி சுற்றுப்புறம் அசுத்தமாகவும் இருக்கிறது. வாசகர்கள் சரிவர வருவதில்லை என்பதால் ஒழுங்காக நடத்தவில்லை. குறைகளைச் சரிசெய்து சீராக நடத்தலாம், அல்லது பேசாமல் மூடிவிட்டுப் போகலாம்.

என். ஸ்ரீதர்

# கடைசி அடி!



✠ மாணவர்களுடன் பெருமாள்

"கடைசியாக நீங்கள் வாங்கியது-அதை இனிமேல் திரும்பவும் வாங்க முடியாது—வாங்கவும் வேண்டியதில்லை எனக் கருதுவது ஏதேனும் உண்டா?" எனக்கல்லூரி ஒன்றில் பணி புரியும் என் நண்பர் பெருமாளைக் கேட்டபோது, அவருடைய பதில் வித்தியாசமாக இருந்தது.

"நான்கடைசியாக வாங்கியவை அடி மற்றும் உதை. நெற்றியிலிருந்து குருதி வழிந்து கண்களில் படரும் வகையில் நான் பெற்ற அடிகளும் உதைகளுமே நான் கடைசியாக வாங்கியது."

"குருதி சிந்தும் அளவுக்கு உங்களை அடித்தவர்கள்?"

"என்றும் என் அன்புக்கும் பாசத்துக்கும் பாத்திரமான சில மாணவர்கள்!"

"காரணம்...."

"தேர்வில் அவர்கள் காப்பி அடித்ததைக் காட்டிக் கொடுத்தமைக்காக...."

"நீங்கள் எப்படித் தாக்கப்பட்டீர்கள்?"

"கல்லூரி முடிந்து நான் சைக்கிளில் புறப்பட்டுக்கொண்டிருந்தபோது சுமார் 20 மாணவர்கள் என்னை நோக்கி வந்தனர். ஏதோ உதவி கேட்டு அவர்கள் வருகிறார்கள் என்றெண்ணிப் புறப்பட்டுக் கொண்டிருந்த நான் சற்றுத் தயங்க — நான் சற்றும் எதிர்பாராத நிலையில் ஒருசில மாணவர்கள் என் சைக்கிளைப் பிடுங்கி தொறுக்க, சிலர் என் கைகளைப் பிடித்துக்கொள்ள — பலர் என்னைத் தாக்கத் தொடங்கினர்...."

"திருப்பித்தாக்கநீங்கள்முயலவில்லையா?"

"இல்லை."

"ஏன்?"

"மாணவர்கள் குழந்தைகள் மாதிரி. குழந்தைகளை நாம் கண்டிக்கும்போது அவை கோபத்தில் நம்மை அடிப்பதில்லையா... அது போலத்தான் மாணவர்களும்... குழந்தைகளை நாம் திருப்பி அடிக்க முடியுமா?"

"அடி வாங்கியதால் நீங்கள் பெற்ற நஷ்டம்?"

"எதுவுமில்லை. சேதமடைந்த சைக்கிளுக்குக் கல்லூரியிலிருந்து பணம் தந்து விட்டனர். மேலும் அடிபட்ட நிகழ்ச்சிக்குப் பிறகு பல மாணவர்கள் இப்போது என்னிடம் மிகுந்த மரியாதையும் அன்பும் கொண்டிருக்கின்றனர். ஆகவே அடிபட்ட எனக்கு இது பெரிய லாபமே தவிர, நஷ்டம் ஏதுமில்லை."

"இதுவே நீங்கள் பெற்ற கடைசி அடி என்று எப்படிச் சொல்ல முடியும்?"

"ஏன் கூற முடியாது? சிறுவனாக இருக்கும்போது என் தந்தையிடம் அடி வாங்கியிருக்கிறேன். இப்போது மாணவர்கள் அதை எனக்குத் தந்துள்ளார்கள். பெரும்பாலான மாணவர்கள் தங்கக் கம்பிகள். விரல் விட்டு எண்ணக்கூடிய ஒருசில மாணவர்களின் தவறான செய்கையின் காரணமாக மாணவர் சமுதாயத்தையே குறை கூறுவது தவறு. தான் செய்தது தவறு என்று ஒரு மாணவன் உணர்ந்து விட்டால் அந்தத் தவறைஅவன் திரும்பவும் செய்வதில்லை. பல்லாண்டு காலமாக மாணவர்களுடன் பழகும் நான் கண்டுபிடித்த உண்மை இது. நான் தாக்கப்பட்டதை அறிந்து சந்தோஷப்பட்ட மாணவர்களை விட வருந்திய மாணவர்களின் எண்ணிக்கையும் மன்னிப்புக் கேட்ட மாணவர்களின் எண்ணிக்கையும் அதிகம். எனவே மறுபடியும் நான் தாக்கப்பட மாட்டேன் என்பது உறுதி."

பெருமாளிடம் விடை பெற்றபோது அவரை மறுபடியும் உற்றுப் பார்க்கிறேன். திருப்பதியில் மட்டுமல்ல... மனித தெய்வமாகவும் ஒரு 'பெருமாள்' வாழ்கிறார் என்று தோன்றியது.

**ஏ.வி.எம். கணேஷ்**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431643)

Assistant Editor: P.S. Mani    Layout Artist: Nambi    Editor: K. Rajendran

REGISTERED No. M. 4393
Registered as a Newspaper in Sri Lanka

# இப்போது! இந்தியாவிலே!
# சிகப்பழகு தரும் உலகுபுகழ்க் கண்டுபிடிப்பு!
# கிளியர்·டோன்

சருமத் தெளிவுடன் சிகப்பழகு தரும் ஒரு சிறப்புப் பொருள் அடங்கியது.

கதிரொளி பட்டுக் கறுக்காமல் தடுக்கும் வெயில் மறிப்பு சாதனம் உள்ளடக்கம்.

மாசுமறு நீக்கும் விந்தையான அமைப்பிலக்கணம் (ஃபார்முலா)

சரும நெகிழ்வுக்கான ஈரவளப்புச் சத்து இதில் மிகுதி

## பரிபூரண சிகப்பழகு சாதன க்ரீம்

கனவு பலித்தது! பொன்வண்ணம் மேனிமீது பூக்க— செவ்வழகு செழிக்க, இதோ **கிளியர்-டோன்** — பாரெங்கும் பல கோடி அழகு மாந்தர் பல நாட்டினர் வேளைவேளை பயன்படுத்தும் சிகப்பழகு க்ரீம்.

**கிளியர்-டோன்** —பன்னாட்டுலக மருந்தாராய்ச்சிப் பயனும்—விந்தையான ஆக்கமுறைச் சிகப்பழகு க்ரீம்— இதனை இப்போது உங்களிடம் கொணருவோர் நிகோலஸ் லெபாரட்ரீஸ் இந்தியா லிமிடெட்.

சருமத் தெளிவுடன் சிகப்பழகு மலரவைக்க கிளியர்டோன் க்ரீமில் இருப்பதென்ன— இந்தியாவில் கிடைக்கின்ற வேறெந்த க்ரீமிலும் இல்லாத ஒரு சிறப்புப் பொருள்: பலநாட்டுலகிலும் ஏற்புப் பெற்ற ஃபார்முலா.

இயற்கையோடு இயற்கையாய்ச் செயல்படும் **கிளியர்-டோன்** அழகு 'சேப்பாக்குது' உங்கள் மேனியை. நீக்குது மாசுமறுக்களை. க்ரீம் இதன் விந்தையான அமைப்பிலக்கணமோ, சூரிய ஒளியிலுள்ள கேடான அல்ட்ரா — வயலெட் கதிர்களை உடம்பின் மேல் பட விடாமல் தடுத்துக் காத்திடுகிறது மேனி கறுக்கா வண்ணம். அதோடல்ல, உங்கள் சருமத்திற்குத் தேவைப்படும் மழமழ ஈரத் தளதளப்பை வரவழைக்குது **கிளியர்-டோன்**. பளிச் வண்ணமாறுதல்— வேளை தவறாமல் 6 வாரம் **கிளியர்-டோன்** உபயோகிக்கும் பலன்கள் ஓகோ பார்த்துப் பூரித்தே போவீர்கள்!

பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது



புதிது



Clear·tone
the perfect fairness cream
Makes you fairer, keeps you fairer, naturally.
LONDON • PARIS • NEW YORK

உயரிய ஃபார்முலா, ஓங்கிய சக்தி

சிகப்பழகு ரகசியம்— இயற்கையாய் உமக்கே. **கிளியர்·டோன்**
லண்டன்·பாரிஸ்·நியூயார்க்.

daCunha/NICL/3/81-TM